# மங்கை பெற்ற மகிமை

பி. ஏ. தாஸ்





மயிலைப் பதிப்பகம்

செந்தோம் :: மைலாப்பூர்

சென்னை-4.

## என்னுரை

'சிதறிப்போன பாவிகளையே நான் தேடிவந்தேன்' என்ற ஏசுவின் பொன் மொழிப்படி—அவர் தேடி வந்த பாவிகளில் தலைசிறந்த பாவியும், சுவிசேஷ புகழுரைக்கு பாத்திரமானவளுமானவள் மேரி மக்த லேனுள்! பதிதை புனிதையாக மகிமை பெற்ற அவள் வரலாறு உலகறிந்தவை.

அவளை நான் புதிய கோணத்தில் நிறுத்தி, கற்பனை மெருகுடன் படைத்த நாவலே இது. நாவல் கண்ணோட்டத்தில் இதைப் படிக்குமாறு எல்லோரையும் பணிவன்புடன் நான் கேட்டுக் கொள்கிறேன்.

இது உருவாக உற்சாகமளித்தவர் மதுரை தெ.நொபிலி அச்சக நிர்வாகி சங். மரிய அருள் தம்புராஜ் சுவாமிகள். இந்நாவலின் முகப்புப் படம் கூட அவருடைய அன்பளிப்புதான். அவருக்கு என் இதய பூர்வமான நன்றி.

முதலில் ஓர் வாரப் பத்திரிகையில் இதை தொடர் கதையாக வெளியிட்டதுமே, ஆயிரமாயிர ரசிக பெரு மக்களின் அமோகப் பாராட்டுதலைப் பெற்றது. பலரது வேண்டுகோளுக்கிணங்கி இப்பொழுது நூல் வடிவில் இது வெளிவருகிறது.

என் அருமை நண்பர் திரு. கே. டி. செங்கோல் அவர்களுக்கு நான் மிகவும் கடமைப்பட்டவன். அவர் ஆரம்பித்துள்ள மயிலைப் பதிப்பகத்தின் முதல் வெளியீடாக—என் கூட்டு முயற்சியில் இந்நூல் வெளி வருகிறது.

மக்தலேனாள் காலத்தில் வாழ்ந்த இரு மாதரசிகள் பெற்ற மகிமையை சித்தரிக்கும் இரு கதைகளையும், இந்நாவலை மேலும் சுவைப்படுத்த சேர்த்திருக்கிறேன்.

அன்பர்கள் எங்கள் பதிப்பகத்தின் மூலம் தொடர்ந்து வெளிவரும் என் நூல்களை வாங்கி ஆதரிக்குமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

சென்னை.
15-8-1957. | பி. ஏ. தாஸ்.

# மங்கை பெற்ற மகிமை



## 1

**அ**வள் சதங்கையின் 'ஜல் ஜல்' என்ற மெல்லொலி திபேரியா வீதியெல்லாம் எழும்பி, ஆடவர் மனதையெல்லாம் சுண்டி விட்டுக் குறும்புச் சிரிப்புச் சிரித்தது.

கிரேக்கர்களும், ரோமையர்களும் பளபளக்கும் அவள் பட்டு மேனியில் தங்கள் பருந்துப் பார்வையை ஓட விட்டனர். அவளது தங்கச் சுருள் கேசத்திலே தங்கள் பெரு மூச்சுகளைச் சிந்தினர். நெஞ்சை அனலாகத் தீயிட்டுத் துடிக்க வைத்த அந்தக் காந்த விழிச் சுழலிலே சிக்கி, அவளையே எல்லோரும் வலம் வந்தனர்.

நடுப்பகல் கதிரவன் காந்த ஒளியிலே அவள் பளிங்கு உருவம் பட்டு தக தகக்கும் மோகன வடிவம், ஆடவர்களையெல்லாம் தன் விளையாட்டுப் பொம்மையாக ஆட்டி விட்டு வேடிக்கைப் பார்த் தது.

மங்கைப் பருவம் பரிபூர்ணமாகப் பூத்துக் குலுங்கும், பதி னெட்டு வயது நிரம்பிய அவள் ஆடினாள். தான் கற்ற கலையின் நுணுக்கத்தை நெகிழவிட்டு—ஆடவர் மயிர்க் காம்பெல்லாம் நெட்டு யிர்த்து வேர்த்து கொட்ட நளினமாக, பரவசம் கொஞ்ச அவள் ஆடி னாள். மண்டை தெறிக்கும் வெயிலில் வாலிபர்களும், வயோதிகர்

களும் தங்கள் முன் பெண் சக்தியே, சுந்தர வடிவமாகி நர்த்தன மாடும் அந்தத் தங்கப் பதுமையிடம் தங்கள் மனதைப் பறி கொடுத்துத் திண்டாடினர்.

எழிலும், ஆடலும், பாடலும் ஒருங்கே கூடி அந்த வீதியையே கலங்கடிக்கும் அந்த நேரத்தில், ஒரு குதிரையின் மீது கலிலேயாவைச் சேர்ந்த ஜோசப் வந்தான். இந்த வீதி மக்களே பைத்தியக்காரர்களோ என்று வியந்து, எதிரே சதங்கைச் சப்தம் எழுப்பும் சரசழகியை அவன் பார்த்தான். சிறிது நேரத்தில் அவனும் தன்னை மறக்கத்தான் செய்தான்.

பளபளக்கும் அந்தப் பைங்கிளியை உதடு துடிக்க பலமுறை அவன் பார்த்தான். பக்கத்தில் நின்றவனிடம், "இந்த நாட்டியக்காரி யார்" என்று கேட்டான் ஜோசப்

"இவளை அறியாத ஆண்கள்கூட இருக்கமுடியாதே? இவள் தான் எழிலரசி, **மேரி மக்தலா**!"

அவளைப் பற்றிக் கேட்டதும் அவன் பார்வை அவள் கட்டுடலையே கட்டிப் படர ஆரம்பித்தது.

"தேன் தூக்கி முல்லை மலர் சிரிக்கத் தென்றல்
சிலிர்க்க வரும் வசந்தத்தி மாலைப் போதில்
சொல்லறிய உள்ளுணர்ச்சி விழி சுழற்றத்
துளிரிதழ்கள் முத்தத்தின் சுவையில் தோய்ந்து!"

என்று இனிமை ஊற அவள் பாடினாள்.

அவள் கீத கானம் அவனை எங்கெங்கோ இழுத்துச் சென்றது. வழி நெடுக நிலை தளர்ந்து சொக்கிக் கிடக்கும் ஆடவர் கூட்டத்தை அவன் பார்த்ததும், அவனையும் மீறி அவன் முகத்தில் சிரிப்பு வெடித்தது.

"சபாஷ்! திபேரியா வீதியே கட்டித் தழுவாத அமுத கானம் —அழகின் நர்த்தனம்!"

திடீரென்று ஒரு கனத்த ஆண் குரல் கேட்டு, கலை மயக்கத்தில் கட்டுண்ட கூட்டத்திடையே ஓர் சல சலப்பு புகுந்தது.

சதங்கை மெல்லொலி மறைந்தது; தேன் கீதம் தேய்ந்தது. அழகி யின் பொற் கரத்தில் தழுவி நாதமிட்ட யாழ் துவண்டு கீழே விழுந் தது.

ஜோசப் புருவத்தை நெறித்து நிமிர்ந்தான்.

உரோம அதிகாரி காயிஸ் பிளாகஸ் தன் பருந்துப் பார்வையை அந்தப் பாவையின் மீது பாய்ச்சிக் குறும்பாகச் சிரித்தபடி நின் றான்.

கம்பீர உடையணிந்து கர்வமாக நின்ற அவனை, பிலாத்துவின் மருமகன் என்று எளிதில் கணித்தறிந்து கொண்டான் ஜோசப். கொடூர குணம் படைத்த அவனை எரித்து விடுவதுபோல் பார்த்தான் ஜோசப்.

இதுவரை அந்த வட்டாரத்தையே ஆட்டிப் படைத்த அந்த பளிங்குச் சிலை, அந்த முரடனின் இறுமாப்புக் குரல் கேட்டு பதறித் தன் சேல் விழிகளை சுற்றிலும் சுழற்றினாள். பிறகு எதையோ நினைத்து தெம்பு கொண்டவள் போல் தன் யாழை மீட்டிக் கானம் எழுப்பினாள்.

எங்கும் கை தட்டல் ஆரவாரம் எழுந்தது. அவள் மீது எல் லோரும் தங்க நாணயமாக அள்ளித் தூவினர்.

திடீரென்று காயிஸ் பிளாகஸ் அவள் அருகே வந்து, அவள் கரத்தைப் பிடித்து தன் அருகே அவளை இழுத்தான். அவள் திடுக் கிட்டுத் திமிறி உதறினாள். கூட்டத்தில் அமைதி குலைந்தது.

"எல்லோரும் கலையுங்கள். கொடியோனிடம் முல்லைக் கொடி சிக்கி விட்டது" என்ற பெரும் கூக்குரல் எங்கும் எழுந்தது!

மேரி மூர்ச்சையாகிக் கீழே விழுந்தாள். ஜோசப் குதிரையி னின்று குதித்து மணலில் துவண்டு கிடக்கும், அவளைத் தூக்கி மூர்ச்சை தெளிவிக்க முயன்றான்.

பிளாகஸ் ஜோசப்பை அடையாளம் தெரிந்து கொண்டான். தன் மாமன், மாமியிடம் வந்து ஜோசப் பேசிக் கொண்டிருந்ததைப் பலமுறை அவன் பார்த்திருக்கிறான்.

"நீரா? திடீரென்று மூர்ச்சையாகும் இவளுக்கு இழுப்பு நோய் இருக்குமோ?"

காயிஸ் கேட்ட கேள்விக்கு ஜோசப் சட்டை செய்து நிமிர வில்லை. பனிபோல முகத்தில் வேர்வை பூத்த அந்த பளிங்குச் சிலையையே பார்த்தபடி அவன் இருந்தான்.

இது நேரமும் அரைக்கண் மூடி உற்றுக் கேட்டுக் கொண் டிருந்த மேரி, திமிறி எழுந்தாள்.

"என் காது ஒன்றும் செவிடு இல்லை. நீங்கள் பேசியதை நானும் கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். எனக்கு இழுப்பு நோய் இல்லை. இந்த பூமியில் கொட்டமடிக்கும் ஆண்களின் அநாக ரீக அட்டகாசம்தான் என் நெஞ்சை அழுத்தித் திணறடிக்க வைத் தது...". பட படப்பாகப் பேசிய மேரி சோர்ந்து துவண்டு நின்றாள்.

"உனக்கு நோய் இருக்கிறதென்று நான் சொல்லவில்லையே? கலிலேய வைத்திய மாணவரான இவர்தான் சொன்னார்."

ஜோசப் நிமிர்ந்து அவனைச் சுட்டு விடுவது போல் பார்த்தான்.

"களைப்பாக இருந்தால் அதோ குளிர்தரும் பூங்கா இருக்கிறது. அங்கு வந்து இளைப்பாறிப் போகலாமே?"

"அரசாங்கத்தில் பொறுப்புள்ள நல்ல பதவி வகிக்கும் சீமானே! நீர் போகலாம். உம் கருணைக்கு என் நன்றி. வணக்கம்". வெறுப் பாக தலை வணங்கி திடீரென திரும்பிக்கொண்டாள் மேரி.

"கோபத்திலும் உன் முகக்கோலம் மிகப் பிரமாதம், மானே!"

காயிஸ் அவளை விழுங்கி விடுவதுபோல் பார்த்து அலட்சியச் சிரிப்பொன்றை வீசி அப்பால் போனான். தூர அவன் உருவம் மறையும் வரை வெறுப்பாகப் பார்த்தபடி நின்றான் ஜோசப்.

கூட்டம் கலைந்து எல்லோரும் போய் விட்டனர்.

"களைப்பாக இருந்தால் இதோ என் குதிரை இருக்கிறது. இதில் அமர்ந்து நீங்கள் போகலாம்..."

கனிவுடன் ஜோசப்பை நோக்கிப் புன்னகை அவிழ்த்தாள் மேரி. அவன் அன்புக் கரம் நீட்டினான். அவன் கரம் பிடித்து

குதிரையில் அவளும் ஏறிக் கொண்டாள். அவளுடைய வாத்தியக் கூட்டம் அவர்களைப் பின் தொடர்ந்தது.

“வைத்தியத் தொழில் செய்ய நீங்கள் ஏன் இந்த தீபேரியாவுக்கு வந்தீர்கள்? இங்கு ஒரே அனல் கொட்டுமே?” அவள் நீல விழிகளில் கனிவு மிதந்தது.

“நோயாளிகள் இங்கு நிறையப் பொருள் தருகிறார்கள். மேலும் அலெக்ஸாண்டர் லிஸிமாசஸ் என்ற பிரபல வைத்தியனிடம் இங்கு நான் பயிற்சி பெறவும் உதவியாக இருக்கிறது. இங்கு சிறிது பொருளீட்டியதும், நான் அலெக்ஸாண்டிரியாவுக்குப் போய், மேலும் மருத்துவம் படிக்கப் போகிறேன்...”

“மருத்துவம் பயில நீங்கள் ஏன் பெர்காமஸ் அல்லது இபிதாருகஸ் ஆகிய பட்டணங்களுக்குப் போகக் கூடாது?”

அவளை வியப்புடன் திரும்பிப் பார்த்த ஜோசப், “அந்தப் பட்டணத்தைப் பற்றியெல்லாம் உங்களுக்கு எப்படித் தெரியும்” என்று கேட்டான்.

“உங்களை விட அந்தப் பட்டணத்தைப்பற்றி எனக்கு அதிகம் தெரியும். எனது பன்னிரண்டாம் வயதிலிருந்தே தீமித்ரீயஸ் அப்பட்டணச் சிறப்பைப் பற்றி என்னிடம் நிறையச் சொல்லியிருக்கிறார்......”

“தீமித்ரீயஸா? யார் அவர்?”

“யாழ் செய்யும் சிற்பி அவர். சகல கலா வல்லுனர். கலையைப் பரப்புவதையே தன் கடமையாகக் கொண்ட கர்ம வீரர். விரைவில் நான் அலெக்ஸாண்டிரியாவுக்குப் போய், அங்குள்ள கீர்த்தி பெற்ற நடன சாலையில் நடனமாடிப் பொருள் குவிக்கப் போகிறேன்...”

“ஆமாம். நீங்கள் யூத குலந்தானே? யூதகுல மங்கை பொது நடன அரங்கில் ஆடக்கூடாதே?”

“நான் அரை கிரேக்க குலம்!”

நாணத்தால் அவள் கனிமுகம் மேலும் கனிந்து சிவந்தது. தான் இறங்க வேண்டிய இடம் வந்ததும் குதிரையினின்று இறங்கினாள் மேரி.

"இந்த ஏழையின் இல்லத்திற்கு தாங்கள் வந்து போகவேண்டும். இன்று என் மானத்தைக் காத்த மகா புருஷருக்கு நன்றிக் காணிக்கையாக என் கையால் சமைத்து..."

அவள் சேல்விழிகள் நன்றி நீர்த்துளிகளில் மிதந்து துடித்தன. அவள் குங்கும இதழ்கள் அழகாக சிலிர்த்தன.

"பெண் குலத்தை என் உயிருக்கு சமமாக மதித்து, அதற்காக என் உயிரை முதலாய் தத்தம் செய்யத் துணிந்துள்ளவன் நான். இன்று ஓர் மனித விலங்கிடமிருந்து உங்களைக் காக்கவேண்டிய என் கடமையைத்தான் நான் செய்தேன். அப்படியொன்றும் அற்புத சாதனையை நான் சாதித்து விடவில்லையே? இந்த தீபேரிய மண்ணின் தலையான பண்பே விருந்தோம்பல். அதற்கு விதிவிலக்காக நான் விருந்திற்குவர மறுக்க முடியுமா? அதிலும் ஆடும் கலையின் அற்புத ......"

"போதுமே...". வெட்கத்தாலும் பூரிப்பாலும் அவள் மேனி சிவந்து குனிந்தாள்.

"அவசர வேலை இருக்கிறது. மறுமுறை அவசியம் நான் வருகிறேன்..."

தூர குன்றில் அவன் தோற்றம் மறையும் வரை, பளிங்குச் சிலை போல எதையோ பறி கொடுத்தவள் போல, இது நாளும் உடலில் மின்னுத ஓர் உணர்ச்சி, அவள் பச்சை நரம்புகளிலெல்லாம் கொந்தளித்தோடியது. நீண்ட பெருமூச்சுடன் தாங்கள் தற்காலீகமாக முகாமிருந்த தோட்ட வீட்டை நோக்கி துவண்டு நடந்தாள் மேரி.

# 2

அன்றைய இரவு முழுவதும் ஜோசப்பிற்கு தூக்கமே வரவில்லை. சிந்தையில் சதா நர்த்தனமாடிக் கீத மெழுப்பி அவன் அமைதியைக் குலைக்கும் அந்த சதங்கைப் பெண்ணை, எவ்வளவு முயன்றும், அவனால் மறக்க முடியவில்லை. மனித குலப்பிணியை அகற்றப் பாடுபடும் வைத்தியத் தொழிலில் புகுந்த அவனுக்கு—ஆசா பாசத்தையே சதா தூண்டிவிடும் எந்தக் கலையைப் பற்றியும் அக்கரையோ—ஞானமோ இயல்பாக எழுந்ததில்லை. இருந்தும், இனந்தெரியாத ஓர் இனிய கவர்ச்சி, மேரி மீது அவனுக்கு ஏற்படத்தான் செய்தது!

மறுநாள் பொழுது புலர்ந்ததும், மேரி கொடுத்த விபரப்படி அவள் இருப்பிடம் தேடிப் போனான் ஜோசப்.

அவனைக் கண்டதும் அறுபது வயதுள்ள ஒரு வயோதிகன் ஓடி வந்து வணங்கி, "வாருங்கள் வாருங்கள், தம்பி!" என்று வாஞ்சையுடன் கரம் பிடித்துத் தன் தோட்ட வீட்டிற்கு அவனை அழைத்துப் போனான்.

"இப்படி அமருங்கள், தம்பி. மேரி கப்பர்னமுக்கு யாழ்களை விற்கச் சென்றிருக்கிறாள். சிறிது நேரத்தில் அவள் வந்து விடுவாள். இன்று உங்களுக்குப் பெரிய விருந்து வைக்க வேண்டுமென்று சொல்

லிச் சென்றுள். நேற்று நீங்கள் மட்டும் இல்லையானுல் மேரி மூர்ச்சித்து விழுந்த நேரத்தில், அந்தக் கொடியோன் காயிஸ் பிளாகஸ் என்ன செய்திருப்பானே?" என்றபடி, பெருமூச்சு விட்டான்.

"அதற்கென்ன?......ஆமாம், மேரி உங்கள் மகளா?"

"இல்லை தம்பி. இவள் என் வளர்ப்புப் பெண். இவளைப்பெற்றவன் ஓர் நாடோடித்திருடன். சதா இவளை அடித்து இம்சித்த அவன், இவளுடைய பன்னிரண்டாம் வயதில் ஒரு உரோமையனிடம் அடிமையாக விற்க விலைகூறிக் கொண்டிருந்தான். இவளுடைய பால் வதனம் என்னைக் கவர்ந்தது. அதிக விலை கொடுத்து இவளை நானே வாங்கி, நடனம், சங்கீதம், தத்துவ சாஸ்திரம் முதலிய கலைகளையெல்லாம் இவளுக்கு நான் கற்றுக் கொடுத்துத் தலைசிறந்த நடனராணியாக்கி விட்டேன். சிறுவயதில் பயத்தால் ஏற்பட்ட அந்த திடீர் மயக்கம் தான், அடிக்கடி இவள் திடுக்கிடும்போது வந்து இவளைத் துவள வைத்து விடுகிறது."

"நீங்கள் அவளை அருமையாகத் தேர்ச்சி பெறச் செய்து விட்டீர்கள். அவளுடைய ஆடலும் பாடலும் ஆஹா!...!... !"

இந்த நேரத்தில், "தீமித்ரீயஸ், தீமித்ரீயஸ்" என்ற ஓர் இனிய பெண்குரல் கேட்டு இருவரும் திரும்பினர்.

மேரி குதித்தபடி ஒரு பையுடன் ஓடி வந்தாள். நெஞ்சில் கத்திக் காயம் பட்ட ஒருவனைத் தூக்கிக் கொண்டு நாலைந்து பேர் அவள் பின்னுல் வந்தனர்.

எதிர்பாராத வகையில், தீமித்ரீயஸ் அருகில் ஜோசப்பை பார்த்ததும், மேரியால் பேசவே முடியவில்லை. பரவசம் பொங்க அவனை பார்த்துப் புன்முறுவல் பூத்தபடி நின்றுள், அவள்!

"நீங்கள் முன்பே இங்கு வந்து விட்டீர்களா? உங்களை தேடி விட்டுத்தான் நான் இங்கு வந்தேன். கிரேக்கருக்கும், ரோமையருக்கும் சந்தையில் ஏதோ அடிதடி ஏற்பட்டது. இந்தச் சைமனும் அதில் கலந்து நெஞ்சில் படுகாயப்பட்டு விட்டார்."

மேரி வார்த்தையை முடிப்பதற்குள், சைமனின் காயத்தைப் பரிசோதித்துச் சிகிச்சை செய்யப் பரபரத்தான் ஜோசப்.

சிகிச்சை செய்து படுக்கையில் சைமனைக் கிடத்தியதும் ஜோசப் புறப்பட்டான். ஆனால் மேரி அவனை விடவில்லை. அன்று தங்களோடு தங்கி விருந்துண்ட பின்பே, போகவேண்டும் என்று ஜோசப்பைத் தடுத்து நிறுத்தி விட்டாள்.

மாலையின் இளங்காற்று அன்று மிகவும் ரம்மியமாக வீசியது. வண்ண மலர்கள் விம்மி வெடித்து நறுமணத்தை எங்கும் வாரித் தூவின. மாலைக் கதிரவனின் சொர்ணக்கதிர் தளதளத்த பச்சை செடி கொடிகளிலே பட்டு வசீகரமாக மினு மினுத்தது.

"நான் அடிக்கடி இங்கு வந்தால் திமீத்ரீயஸுக்கு வெறுப்பை அளிக்குமோ?"

"உங்களை வெறுக்கவோ, நீங்கள் வருவதைத் தடுக்கவோ, இங்கு யாருமில்லை. சொந்த வீடுபோல நீங்கள் எப்பொழுதும் இங்கு வரலாம், போகலாம்."

"அப்படியா!"

"என்னைக் கண்டாலே வாலிபர்கள் அச்சப்படுகிறார்கள். அவர்களின் தாய்மார்கள் நான் ஓர் நடனமாடும் வேசி என்று சிடுசிடுப்பதே இதற்குக் காரணம்". அவள் முகத்தில் வேதனை நிழலாடியது.

"ஆனால், என் தாயார் ஒருக்காலும் உன்னைப் பற்றி இப்படிக் கேவலமாக எண்ண மாட்டார்கள்..."

"நானும் அப்படித்தான் நினைத்தேன்" என்றபடி அவனைப் பார்த்துக் குறும்பாகச் சிரித்தாள் மேரி.

"இன்னும் இரண்டு மாதங்களில் நான் மேற் படிப்புக்காக அலெக்ஸாண்டரியாவுக்குப் போகிறேன்".

இதைக் கேட்டதும் மேரியின் முகத்தில் கவலை இருள் பதிந்தது.

"படிப்பு முடிந்ததும் திருமணம். இந்த நடனக்காரி மேரியின் நினைவுத் தடம் எங்கே இருக்கப்போகிறது இந்த அரச வைத்தியரின் உள்ளத்தில்?"

அவள் விழி வளைவுகளில் நீர்த்துளிகள் மின்னின.

“என் தாயார் எனக்கு முன்பே பெண் பார்த்து விட்டார்கள். என் படிப்பு முடிந்ததும் திருமணம். எனக்காகக் காத்துக் கிடக்கும் அந்தப் பேரழகி, கீதகுயில் யார் தெரியுமோ? அவள் தான் என் மேரி மக்தலா!”

பெருமூச்சு விட்டபடி மேரி அவனது அகன்ற மார்பில் சாய்ந்தாள். அவளை வாரி அணைத்து அவளுடைய நீல விழிகளை ஆசையாரப் பார்த்தான் ஜோசப். மேரியின் முகம் அந்தி வானச் சிவப்போடு போட்டி போட ஆரம்பித்தது.

“நான் நாடறிந்த நடனக்காரி. பலர் கேலிக்கும் அருவறுப்பிற்கும் இலக்கான நான் ஓர் அபலை. தங்களுக்கு மனைவியாகும் பாக்கியமில்லாத அபாக்கியவதி. என்னை மறந்து விடுங்கள், ஜோசப்!!”

“உண்மையைச் சொல், மேரி. நீ என்னை முழு மனதுடன் நேசிக்கவில்லையா, சொல் மேரி! சொல்”

அவள் முகத்தை மூடி தேம்பித் தேம்பி அழுதாள்.

“என் உடலில் ஓடும் ஒவ்வொரு துளி இரத்தமும் உங்கள் பெயரைச் சொல்லிப் பூரிக்கிறது. இந்த உலகில் நீங்களே எனக்கு சகலமும்! என் இதய சாம் ராஜ்யத்தின் ஏகச்சக்கிராதிபதி, நீங்களே! ஆனால், பகிரங்கமாகத் தங்களுடன் வாழத் தகுதிவாய்ந்த உயர்ந்த வம்சத்தவள் இல்லையே நான். ஆடிப்பிழைப்பவள் தானே, ஜோசப்!”

“அன்பே! நமக்காகவே, நாம் வாழப் போகிறோம், உலகத்திற்காக அல்ல. தூய இரண்டு இதயங்களின் காதல் சங்கமத்திற்கு முன், உலகின் கண்கள், ஒளிப்புழுக்கள்!” என்று அவளது தங்கச் சுருள் கேசத்தைக் கோதியபடி அவளை விழுங்குவதுபோலப் பார்த்தான் ஜோசப்!

“எனக்கு சகல கலைகளையும் பயிற்றுவித்து அலெக்ஸாண்டிரியாவிலேயே இணையற்ற நடன ராணியாக என்னைக் கீர்த்தி சூட வைத்த திமீத்ரீயஸை என் தந்தைபோல் நேசிக்கிறேன். அரச வம்சத்தில் பிறந்து, வைத்திய நிபுணராகப்பட்டம் பெற்று அறிவுத் தீட்

சண்யமும், அன்பும், எளிய குணபாவமும் கொண்ட தாங்கள், பல ரால் சாகசக்காரி என்று முணுமுணுக்கப்பட்ட இந்த மக்தலேன் மேரியை தன் நெஞ்ச மலராக ஏற்ற தங்களை என் வாழ்வின் தெய்வ மாக போற்றி தினமும் வணங்கி வருவேன்.''

"மேரி, நீ திபேரியாவுக்குப் போகவே கூடாது. பருவப் பெண் களைக் கண்டாலே மிருகங்களாக மாறும் உரோமையர்களிடம் நீ சிக்கி விட்டால்?''

"ஜோசப்! நெஞ்சில் வீரமும் உடலில் உறுதியும் உள்ள இந்த மேரியின் மேல், எந்த ஆடவனின் வாடையும் தீண்ட முடியாது. கயவர்கள் முன், நான் கருநாகமாகச் சீறி அவர்களை ஓட ஓட விரட்டுவேன்.''

ஜோசப்பின் முகமே பெருமையால் பூரித்தது. இமை மூடி ஆனந்தக் கண்ணீர் விட்டான்.

அவர்களைப் பார்த்து சிரித்தபடி வளர்மதி வான் முகட்டில் தாவிக் கொண்டிருந்தது. அவர்களுக்கு நேரம் போனதே தெரிய வில்லை.

"மேரி...மேரி''. திமீத்ரீயஸ் தயங்கி தூர நின்றபடி குரல் கொடுத்தான்.

பூத்த மலர்களையும், பூரித்த தங்கள் கண்களையும் பார்த்துப் பர வசமான காதலர்களின் செவிகளிலே திமீத்ரீயஸ் குரல் விழுந்ததும், இருவரும் திடுக்கிட்டு எழுந்தனர்.

"மன்னிக்கவேண்டும். இளம் உள்ளங்களுக்கு நேரம் கரும்பு போல. வளர்ந்துபோவதே தெரியாது. அதோ வான் மதியைப் பாருங் கள்...''

"அதிக நேரமாகி விட்டதே! நாளை ஓர் நோயளிக்கு அளிக்கும் சிகிச்சை சம்பந்தமாக இன்று இரவெல்லாம் நான் வைத்திய நூல் களை ஆராய்ச்சி செய்ய வேண்டும். சரி, நான் வருகிறேன் மேரி.''

"ஜோசப், நாளை நீங்கள்''

"அவசியம் வருகிறேன். வரட்டுமா?"

"ஓய்வு கிடைக்கும் போதெல்லாம் நீங்கள் இங்கு வந்து போக வேண்டும். எங்கள் குடும்பத்தோடு நீங்களும் ஒருவராகி விட்டீர்கள்..."

ஜோசப், திமீத்ரீயஸ் சொல்வதை இதயக் கனிவுடன் ஏற்றுக் கொண்டதற்கறிகுறியாக கையசைத்தபடி வேகமாக தோட்டத்தை விட்டு வெளியே நடந்தான்.

மறுநாள் மேரி தோட்டத்தில் ஏதோ ஆழ்ந்த சிந்தையில் இருக்கையில், ஓர் தூதுவன் வந்து யூதேயா கவர்னர் போந்துபிலாத்து தான் நடத்தும் அரசாங்க விருந்தொன்றில் நடனமாட அவளை அழைப்பதாக ஒரு லிகிதத்தை மேரியிடம் கொடுத்தான்.

மேரியும் உடனே தன் சம்மதத்தை தெரிவித்து விட்டாள். வீதியில் நடனமாடிய அவளை வலுவிக்க முன் வந்து அரச சபைக்கு அழைத்துக் கௌரவிக்கும் அந்த அழைப்பை அவள் எப்படித் தட்டிக் கழிக்க முடியும்?

கலைப்பசி அவள் அறிவுக் கண்களை குருடாக்கிவிட்டது.

# 3

**போ**ந்து பிலாத்துவின் உய்யான நந்தவனத்திலுள்ள வசந்த மண்டபத்திற்கு, மேரி தன் பக்க வாத்தியங்களுடன் வந்து சேர்ந்தாள்.

முன்பு தூதுவனுக வந்தவனே, காத்திருந்து அவளே வரவேற்ருன். பின்பு அவர்களே அருகிலுள்ள பளிங்கு மாளிகைக்கு அழைத்துப் போய், "நீங்கள் எல்லோரும் இங்கு ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்" என்று கூறிவிட்டுப் போய் விட்டான்.

தனக்கு அங்கு காட்டப்படும் மரியாதையையும், அளிக்கப்பட்ட மாளிகையையும் பற்றி அவள் நினைக்கும்போது, அவள் கனவு இதயம் அடைந்த ஆனந்தத்தைச் சொல்லி முடியாது. வீண் கூச்சலிட்டு ஆர வாரிக்கும், படியாத மக்கள் முன், வீதியில் நடன மாடுவதை விட—படித்த மேதைகள், பிரபுக்கள், அழகிகள் குழுமிய விருந்து மண்டபத்தில் தான் கற்ற கலையைக் காட்டி—பாராட்டும் நிறையப் பொருள் குவிப்பதும், எப்படி?

ஆழம் நிறைந்த மடுவில் குமிழிட்டு கோலமிடும் சுழல்கள்கூட பார்ப்பதற்கு வெகு அழகாகத்தான் இருக்கின்றன. ஆனுல், மரணத்தின் வாயிற்படியும் அதுவேதான் என்பதை பயமறியா குதித்தோடும்

இளங்கன்று எப்படி அறிய முடியும்? ரம்மிய நினைவில் மெய் மறந்த மேரி, குழந்தையைப் போல குதித்தோடி அந்த மாளிகையையே வலம் வர ஆரம்பித்தாள்.

விருந்து மண்டபத்தில் மேரியின் நடனம் ஆரம்பமானது.

சிங்காரக் கவிதையே உயிர் பெற்று அழகிய பெண் வடிவில் தங்கள் முன் இதயத்தைச் சுண்டி விடுகிறதோ என்று யாவரும் மெய்சிலிர்த்தனர்.

மேரி பளபளக்கும் பட்டுப் பூச்சி போல் ஆடினாள்; ஆடினாள். யாழை மீட்டி தேங்கமழும் குங்குமப் பூ இதழ் சிலிர்க்க, அவள் பாடினாள். அந்த உல்லாசக் கூட்டமே மதுவோடு மங்கையோடு மண்டபத்திலே சொக்கிக் கிடந்தன.

உயர்ந்த அதிகாரிகள், அழகிகள், பிரபுக்கள், பிலாத்து—அவன் காதலி புரோக்குலா எல்லோரும் கைதட்டி ஆரவாரம் செய்து தங்க நாணயத்தையும்; வயிரத்தாலும், முத்தாலும் இழைத்த விலை மதிப்பில்லா நகைகளையும் அவள் மீது வீசி யெறிந்து தங்கள் மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டனர்.

“மக்தலாவின் அழகின் ஜோதி! கவிதைச் செல்வி. கீத குயில்!”

மது மயக்கத்தில் வெறி உணர்ச்சியில் தங்கள் மனம் போனவாறு அவளைப் புகழ்ந்து எல்லோரும் ஆடிக் குதித்தனர்.

தன் ஆட்டம் முடிந்ததும் தன் நன்றியைத் தெரிவிக்கும் வகையில் எல்லோரையும் வணங்கி விட்டு, மண்டபத்திலிருந்து வெளி வந்து ஆடை மாற்றும் அறையில் புகுந்தாள் மேரி. ஆனால் அடுத்த அறையில் தவறி அவள் புகுந்து விட்டாள்.

அந்த அறை முழுவதும் சொக்கும் வகையில் பட்டுப் படுதாவாலும், வர்ண ஓவியங்களாலும், மலர்களாலும் அலங்கரிக்கப் பட்டிருந்தது. அந்த அறையின் நேர்த்தியை மேரி கண்குளிர ரசிக்கும் நேரத்தில், தான் முன்பு எப்பொழுதோ கேட்ட சிரிப்பொலியைப் பின்புறம் கேட்டாள். அதை அடுத்துத் திறந்து கிடந்த அறைக் கதவு மூடப்பட்டது.

திடுக்கிட்ட மேரி சுற்றிலும் பார்த்தாள்.

"அழகின் ஜோதி! கவிதைக் குயில்—பேரழகி, மேரி!"

அவள் எதிரில் காம உணர்ச்சியே பயங்கர வடிவில் நடமாடும் காயிஸ் பிளாகஸ், மான் முன் ரத்த வெறி கொண்ட புலி போல் நின்ருன். எதிர்பாராது நிராதரவான அந்த இடத்தில் அந்த அதமனைப் பார்த்ததும், அவள் அங்கமே பயத்தால் நடுங்கியது. வெட வெடக்கும் அவள் உதடுகள் விதிர்த்துப் போயின.

"தங்கச் சிமிழே! பருவச் சிலையே! உன் தோகை நடனம் உரோமையர் நெஞ்சையே குலுக்கி வெறி உணர்ச்சியைக் கொந்தளிக்கச் செய்து விட்டது. இன்றைய உன் ஆட்டத்தை ஏற்பாடு செய்தவன் நானே. தனிப்பட்ட என் வெகுமதியை அளிக்கவே நான் இங்கு வந்தேன். எங்கே, அருகேவா. உன் பவள இதழில்......" என்றபடி நெருங்கினுன் அவன்.

மேரி நடுங்கி அறையைச் சுற்றி ஓடினுள்.

பிளாகஸ் பயங்கரமாகச் சிரித்தபடி அவளை வலம் வந்தான். தான் இதுவரை காத்து வந்த மானத்தைக் காப்பாற்ற மேரி ஓடினுள்; போராடினுள்.

தன் ஆசைகளையேப் பிழிந்து தன் நேசன் ஜோசப்பிற்கு அர்ப்பணித்த தன்னைக் காப்பாற்ற அவள் போராடினுள். அவள் நடனக்காரிதான். ஆனுல், வேசி அல்ல. அவளும் பெண்தான் என்பதை அதமனுக்கு எடுத்து விளக்கத் துணிந்தாள். தன் உடலில் தெம்பு இருக்கும் வரை அவனை நெருங்க விடாமல் தன்னை அவள் காத்தாள்.

ஆனுல், அந்தோ...! அவளுடைய அபயக் கூக்குரல் அந்த மாளிகைச் சுவரோடு மோதி அடங்கி விட்டது. அவள் அப்படியே மூர்ச்சித்துக் கீழே விழுந்து விட்டாள்.

முடிவில் புலிக்கு இறையான மான் போலானுள் மேரி. பெண்மையின் பலஹீனத்தை, ஆண்மையின் ஆவேச வெறி பலி கொண்டு விட்டது.

# 4

வேலை மிகுதியால் ஒருவார காலமாக மேரியை சந்திக்காத ஜோசப், ஆவலாக அவளைத் தேடி வந்தான். வழி யெல்லாம் தன் தங்க ராணியை கட்டிப் பிடிக்கப் போகிறோம் என்ற களிப்புடன் தான் அவன் எவ்வளவோ கனவு கண்டான்..

ஆனால், பிலாத்துவின் அரண்மனைக்கு மேரி நடனமாடப் போனதைப் பற்றி திமீத்ரீயஸ் சொன்னதும், ஜோசப்பின் நெஞ்சே உறைந்து விட்டது.

"திமீத்ரீயஸ்!"

வேர்த்து விறு விறுத்து பேயரைந்தவன் போல் நின்ற ஜோசப் பின் விசித்திரத் திடீர் தோற்றத்தைப் பார்த்ததும், திமீத்ரீயஸ் வெல வெலத்து விட்டான்.

"ஏன், ஜோசப் இப்படி? அரச மண்டபத்தில் தானே, கலைக்கு உண்மையான மகத்துவம்—பாராட்டெல்லாம் கிடைக்கும்? மேரியும் தான் கற்ற கலையைக் காட்டி விருது பல பெறப் போனதில் குற்ற மில்லையே......?"

"கலை—அரச மண்டபம்? புள்ளி மான், இறை தேட புலிக் குகையைத் தேடிப் போனதுபோல் இருக்கிறது, திமீத்ரீயஸ்! பொன்

னும், வைரமும், பட்டும் பீதாம்பரமும் பகட்டடிக்கும் ஆஸ்தான மன்றத்தில் காமக் கழுகுகளின் கோரக் கண்களும் ஜொலிக்கும் என்பதை நீர் மறந்து விட்டீரா? அந்தோ! என் நெஞ்ச மலர் இந் நேரம் என்ன ஆனளோ? கலைப் பசியும், புகழ் வெறியும் அவள் அறிவுக் கண்களைக் குருடாக்கி விட்டனவே, திமீத்ரீயஸ்?''

தலையில் அடித்துக்கொண்டு அந்தப் பிராந்தியமே எதிரொலிக்கும் வகையில் ஜோசப் அலறினன்.

''மேரியின் நடனத்தை பாராட்டும் வாய்ப்பல்ல இது—அவள் பெண்மையை மாசு படுத்தி, தன்வெறிக்கு இலக்காக்க பிளாகஸ் விரித்த வஞ்சக வலை இது, திமீத்ரீயுஸ்......''

''ஜோசப்!''

உணர்வடைந்த திமீத்ரீயஸ் பட படப்புடன் ஜோசப்பைத் தொடர்வதற்குள், அவன் தன் குதிரையில் ஏறி வேகமாகப் பறந்தான்.

உத்யான நந்தவனத்தில் ஜோசப் தன் குதிரையுடன் நுழைந்ததும் மல்லிகைச் செடிப் புதரை அடுத்த ஒரு குழியிலிருந்து, ஓர் ஆணின் அபயக் கூக்குரல் கேட்டது.

ஜோசப் குதிரையினின்று குதித்துக் குழி அருகே போய் எட்டிப் பார்த்தான்.

அரைவட்ட நிலாவின் ஒளியில் அவன் முன்பு எங்கோ பார்த்ததுபோல் ஓர் உருவம் தெரிந்தது. குரல் கொடுத்துக் கரம் நீட்டி அவனைக் குழியினின்று தூக்கினன் ஜோசப்.

மேரியின் பின்னணி வாத்யக் குழுவின் தலைவன் ஹட்ஜா தான் அவன். அவன் நெஞ்சில் பலத்த காயம். மேலெல்லாம் ஒரே ரத்த வெள்ளம். ஜோசப்பைப் பார்த்ததும் அவன் கரம் கூப்பினன்.. அவனல் பேச முடியவில்லை. முக்கி முரண்டி கரகரப்புடன் அவன்பேசினன்.

''நேற்று விருந்தில் மேரியின் நடனம் நடந்தது. முடிந்து ஏராளப் பரிசுப் பொருள்களுடன் நாங்கள் வெளி வந்தபோது சிறை

படுத்தப் பட்டோம். மேரியைக் காப்பாற்றத் தாவி ஓடிய என்னை, ஒருவன் குத்திப் படுகாயப்படுத்தி இங்கு தூக்கி வந்து போட்டு விட்டான். வசந்த மண்டபத்தை அடுத்த மாளிகையில் காயிஸ் பிளாகஸ் அழகின் ஜோதி மேரியை சிறைபடுத்தியிருக்கிருன். சீக்கிரம் ஓடி அவளைக் காப்பாற்றுங்கள்.''

அதற்கு மேல் ஹட்ஜாவால் பேச முடியவில்லை. அவன் வாயில் நுரை கக்கியது; அவன் தலையும் துவண்டது.

தான் நினைத்தபடி நடந்துவிட்டதை எண்ணியதும் ஜோசப் எரிமலையாகி அந்த மாளிகையை நோக்கி ஓடினன்.

மாளிகையெங்கும் ஆள் அரவமே அற்று செத்த அமைதிதான் விரவிக் கிடந்தது. அடிமேல் அடிவைத்து அச்சத்துடன் சுற்றிலும் பார்த்தபடி உள்ளே நடந்தான் ஜோசப். நந்தவன விருட்சங்களில் ஆந்தைகளின் அலறல் பயங்கரமாக எழுந்து எதிரொலித்தது. ஜோசப்பின் வலது கரம், தன் இடையில் மறைத்து வைத்திருந்த குத்து வாளைப் பிடித்திருந்தது.

திடீரென மண்டபத்தை அடுத்த அறைக் கதவு திறக்கப்படும் ஓசை கேட்டது. ஜோசப் மறைந்து நின்று கவனித்தான்.

காயிஸ் பிளாகஸ் தன் உடையைச் சரி செய்து கொண்டு வெளிவந்து சுற்றிலும் பார்த்தபடி, வேகமாக நடந்தான். அவன் மறைந்ததும் ஜோசப் அறைக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே போனன்.

எதிரே அவன் கண்ட காட்சி! அறை முழுவதும் சாமான்கள் சிதறிக் கிடந்தன. அவன் நெஞ்சோட்டத்தையே சிதைக்கும் வகையில் மேரி, அலங்கோலமாக உணர்வற்றுத் தரையில் கிடந்தாள். ஆடையெல்லாம் கிழிந்து அங்கம் தெரியப் போராடித் தோற்றச் சோர்வுடன் அனுதரவாகக் கிடக்கும் அந்த அபலையைப் பார்த்ததும், வெகுநேரம் அப்படியே கல்லாக சமைந்து நின்றுன் ஜோசப்.

அங்கம் துடிக்க ஜோசப் குனிந்து அவள் ஆடைகளை சரி செய்தான். இரவு முழுவதும் கண்ணீர் சிந்தியபடி கவலையுடன் அவள்

அருகே அமர்ந்திருந்தான். அவன் நெஞ்சு பொங்கும் கடல்போல் குமுறிக்கொண்டிருந்தது.

பொழுதும் புலர்ந்தது! காலைச் சூரியனின் வெண்கதிர் சாளரத்தினூடே பாய்ந்து அவள் முகத்துயரை விரித்தது. அவள் இன்னும் கண் திறக்கவில்லை. கண்ணீர் வடித்து சோகமே உருவாக அவள் தலையை தன் மடியில் கிடத்தியபடி அமர்ந்திருந்தான் ஜோசப்.

தேங்கிய சிந்தனை மறைந்து உணர்வு பெற்ற ஜோசப், அவள் முகத்தில் படிந்து கிடந்த தங்கச் சுருள் கேசத்தை நீக்கி, அவள் நெற்றியில் முத்தம் பதித்தான். பிறகு தன் தோளில் தூக்கிப் போக முடிவு செய்து அவளைத் தூக்கினான்.

அப்பொழுதுதான் மேரியின் உடலில் உணர்ச்சி பிறந்தது. அங்கம் நெளித்து அவள் மெதுவாக இமை திறந்தாள். ஒரு நாளும் இல்லாத சோர்வு இன்று அவளைப் பிடித்தாட்டியது. இரவு நடந்த அந்த பயங்கரப் போராட்டத்தின் நினைவு அவளை நடுங்க வைத்து கண்களைக் குளமாக்கியது.

"மேரி..."

ஜோசப்பின் கனிவுக் குரல் கேட்டுத் திடுக்கிட்ட அவள், நிமிர்ந்தாள். அவனைப் பார்த்ததும் அவள் துடித்தெழுந்து அப்பால் நின்று, தன் முகத்தை மூடியபடி தேம்பித் தேம்பி அழுதாள்.

"ஜோசப்! போய் விடுங்கள் நேற்று இருந்த மேரி அல்ல, இப்போது நான். மானத்தை இழந்தவள். முன்பு உலகம் என்மீது சாட்டிய பொய்க் குற்றம் இன்று உண்மையாகி விட்டது. ஆனால் மனதறிந்து நான் என் மானத்தை இழக்கவில்லை. மிருகம்கூட செய்யத் துணியாத கேவலச் செய்கையை, அரசியலில் பொறுப்புள்ள அதிகாரம் வகிக்கும் ஓர் மனித மிருகம் இன்று என் பெண்மையைச் சூறையாடி விட்டது. நான் பதிதை. கைத்தப் பால்; நஞ்சேறிய உடல், ஜோசப்".

முகத்தை மூடி, 'கோ'வென்று கதறியழுதாள் மேரி. ஜோசப் அவள் கலைந்த கூந்தலை வாஞ்சையாக தடவியபடி கனிவாகப் பேசினான்.

"மேரி! நடந்ததை மறப்பதே மனிதத் தன்மை. மனதறியாது உணர்வேயற்ற நேரத்தில் நடந்துபோன ஒரு தவறை நினைத்து காலமெல்லாம் கண்ணீர் உகுப்பதா? இதோ உன் ஜோசப்பைப் பார் மேரி. உன் மீது கொண்ட பாசம் முன்னிலும் மேலாக இன்று பற்றி எரிகிறது.

ஆசை கொஞ்சும் அவன் விழிகளையே சிறிது நேரம் அசையாது பார்த்தபடி இருந்தாள் மேரி.

"ஜோசப்! தங்கள் தூய அன்பு மயமான தேன் சொற்கள் என்னைக் கொல்லாது கொல்லுகின்றன. பருவப் பெண்ணின் மானத்தைக் குடித்த பாவி—பெண்மையை நிர்மூலமாக்க வந்த வெறி கொண்ட சமுதாயத் துரோகி, அவன்..."

"மேரி இனி அவனை என்ன செய்தாலும், நடந்தது நடந்ததுதான். அவனை மன்னித்துவிடு..."

திடீரென ஆவேசம் வந்தவள் போல குதித்தெழுந்தாள் மேரி.

"மன்னிப்பு. என் வயிறு பற்றி எரிகிறது, ஜோசப். மான் போல மருட்சி கொண்ட என் பெண்மை, இன்று வெறி கொண்ட புலியாகி விட்டது. பழிக்குப் பழி. என் கண்ணீருக்கு காணிக்கை அந்தப் பேயனின் ரத்தம்—துடி துடிக்கும் அவன் உயிர். எனக்கு நேர்ந்தது போல் மற்ற பெண்களுக்கும் அவனால் நேரக் கூடாது. பழிக்குப் பழி..."

"மேரி"

பிடித்த அவன் கரத்தை உதறித் தள்ளினாள் அவள்.

"வழி விடுங்கள், ஜோசப். என் வஞ்சம் தீர்ந்தால்தான், இனி நான் பெண். அதுவரை நான் பேய்..."

குபீரென்று ஜோசப்பின் இடையிலிருந்த கொடுவாளை உருவி எடுத்து வெளியே ஓடினாள் மேரி.

வெல வெலத்த் ஜோசப், "மேரி, மேரி" என்று கூவியபடி அவளைத் துரத்திப் பின்னால் ஓடினான்.

கரத்தில் பளபளக்கும் கத்தியுடன் ஆவேசமாக ஓடிய மேரி, வாயிற்படியில் தடுக்கி கீழே வீழ்ந்தாள். துரத்தியபடி பின்னால் ஓடி வந்த ஜோசப், அப்படியே அவளைத் தூக்கி தாங்கிக் கொண்டான். அவள் துள்ளி விடுபட்டு எழுந்தாள். ஜோசப் அவளை விடவில்லை.

"மேரி! கோபத்தைத் தணி. கொந்தளித்துக் கொலைகாரியாகி விடாதே, நிதானம் கொள். அவனை மன்னித்து மற..."

"என்னை வஞ்சித்தவனை நான் வஞ்சம் தீர்த்தால்தான் என் மனம் அமைதி அடையும். என்னை விடுங்கள். நீங்கள் தொட நான் அருகதையற்றவளாகி விட்டேன்..."

மேரியைச் சமாதானம் செய்து அழைத்து வந்து, அவள் இருப்பிடம் சேர்த்தான் ஜோசப்.

இடையில் ஒருவாரம் அவளை அவன் சந்திக்கவில்லை.

ஒரு நாள் ஜோசப் தன் வைத்திய சாலையில் நோயாளிகளை கவனித்துக் கொண்டிருக்கும்போது, மேரி அங்கு ஓடி வந்தாள்.

"நீங்கள் எனக்கு குறிப்பிட்டுக் கொடுத்த மருந்தான கோரா திராட்க்ஷை ரசத்தைக் கொடுங்கள்..."

அவளைக் குறும்பாகப் பார்த்த ஜோசப் தனக்குள் சிரித்துக் கொண்டான். அவளுக்கு ஓர் ஜாடியை சுட்டிக் காட்டியபடி ஜோசப், அந்த மதுவை அவளுக்கு ஊற்றிக் கொடுத்தான்.

தங்க நாணயங்கள் நிறைந்த அந்த ஜாடியைப் பார்த்த மேரியின், ஆசை விழிகள் களிப்பால் துடித்து ஒளியேறின, தன் வைத்தியத் தொழிலில் ஜோசப் சிரமப்பட்டு சேமித்த தொகை அது.

"அப்போ நீங்கள் அலெக்ஸாண்டிரியாவுக்குப் படிக்கப் போவீர்கள்?" என்றபடி ஏக்க பெருமூச்சு விட்டாள் மேரி.

"இல்லை, முதலில் நான் ஜெருசலேம் போகிறேன். திரும்பியதும் மக்தலாவில்தான், என் மேரி அருகில் என்றும் நான் இருப்பேன்..."

இந்த அன்பு மயமான வார்த்தையைக் கேட்டதும், மேரி தன் முகத்தை மூடிக் கொண்டு அழ ஆரம்பித்துவிட்டாள்.

"தயவு கூர்ந்து இந்த பதிதையை மறந்துவிடுங்கள். காயிஸ் பிளாகஸை நான் கொன்றுல்தான், என் மனம் ஆறுதலடையும். அதுவரை...அதுவரை..."

"மேரி..."

அவள் திரும்பிப் பாராமல் பித்து பிடித்தவள் போல் வெளியே வேகமாக நடந்தாள். அவள் விசித்திரப் போக்கு அவனை பீதியடைய வைத்தது.

"யூதச் சட்டப்படி கன்னிப் பெண்ணைக் கெடுத்தவனைக் கொலையும் செய்யலாம். அதன்படி மேரி காயிஸ்பிளாகஸைக் கொன்று பழி தீர்ப்பதும் நியாயம்தான்..."

ஜோசப் தன் மனதிற்குள் இதை சொல்லிக் கொண்டு நீண்ட பெருமூச்சு விட்டான்.

மறுநாள் மேரியைப் பார்க்க ஜோசப் போனுன். ஆனல், அவளைச் சார்ந்த யாருமே அங்கு இல்லை. யாவரும் அலெக்ஸாண்டிரியாவுக்குப் போய் விட்டதாக கேள்விப்பட்டான்.

ஏமாற்றத்துடன் ஜோசப் தன் இருப்பிடத்திற்கு வந்தபோது, அரசாங்கத்திலிருந்து வந்த ஓர் அழைப்பு அவனுக்காக காத்திருந்தது.

ஜெருசலேம் ஆலயத்தில் ஐந்தாண்டுகள் வைத்தியனுக பணியாற்றிய பின், அவன் மேற்படிப்புக்கு போகலாமென அவனிடம் அரசாங்கம் கேட்டிருந்தது.

அவனும் அந்த உத்தரவை ஏற்றுக் கொண்டான்.

# 5

இடையில் ஐந்து ஆண்டுகள் ஓடிவிட்டன. ஜோசப்பும் மேரியை சந்திக்கவே இல்லை.

ஜோசப் மேற்படிப்புக்குப் போக அரசாங்கம் அனுமதித்தது.

தன் வைத்திய நண்பன் பானு ஜீவகாவுடன் அலெக்ஸாண்டிரியாவுக்கு ஜோசப் புறப்பட்டான். தன் நண்பனை நினைக்கும் போது ஜோசப்பிற்கு வியப்பும், பூரிப்பும் மேலிட்டது.

இந்தியாவிலுள்ள மலையாளக் கடற்கரையைச் சேர்ந்தவன் பானு ஜீவகா. வைத்திய நுணுக்கத்தை அறிய வெகு தொலைவிலிருந்து ஆர்வமாக வந்த ஜீவகா மீது அதிகப் பற்று வைத்திருந்தான் ஜோசப். இந்தியர்களின் மகத்தான கப்பற் போர் திறத்தையும், பட்டு, முத்து வியாபாரத்தையும் பற்றி முன்பே கேள்விப்பட்டிருந்த ஜோசப், இந்தியர்களின் வைத்திய ஆர்வ நுட்பத்தையும், தெளிந்த அறிவையும், புனித அன்பையும் ஜீவகா மூலம் இன்று கேட்டறிந்ததும், சிலாகித்துப் போற்றினான்.

அலெக்ஸாண்டிரியாவின் கடற்கரையில் காலை வைத்ததுமே, அந்நகரின் எழில் அவர்களின் ரஸிக விழிகளை குளிர்வித்தது.

முதல் வேலையாக ஜோசப் நேராக அந்நகரிலுள்ள பிரபல நடன சாலைக்குப் போய், மேரி மதலேனுளைப் பற்றி விசாரித்தான். அங்கு யாருமே அவளைப் பற்றி கேள்விப்பட்டதாகக் கூட தெரிய வில்லை.

ஜோசப்பிற்கு மத்தட் என்ற வாலிப வியாபாரி நண்பனுனன். மத்தட் ஓர் உல்லாசப் பேர்வழி. நடனம், பாட்டு, கூத்து என்ருல் அவனுக்கு உயிர். எந்த முக்கிய வேலையிருந்தாலும் அப்படியே போட்டுவிட்டு, முதலில் நடன சாலைக்கு ஓடக்கூடிய கலாரசிகன்.

ஒரு நாள் மாலை ஜோசப்பை நடனசாலைக்கு மத்தட் அழைத்துச் சென்று, அன்று நடனமாடப் போகும் ஓர் அழகியைப் பற்றி கதை அளந்தான்.

"இந்நகர மக்கள் அவளை ஓர் தெய்வலோகப் பெண் போல் பாவித்து போற்றி வணங்குகிருர்கள். அலெக்ஸாண்டிரியாவின் அழகின் ஜோதி அவள்!"

மத்தட்டின் வர்ணனையை காதில் வாங்கிக் கொள்ளாதவன் போல முகபாவத்தை மாற்றி, அந்த நடனசாலையின் அழகிய அமைப்பையும் மக்கள் கூட்டத்தையும் பார்த்து வியந்தான் ஜோசப். இதற்கு முன்பு அந்த நடன சாலையை ஜோசப் பார்த்தது கிடையாது.

"இன்னும் சிறிது நேரத்தில் அழகின் ஜோதி வந்து விடுவாள். அதோ முன் ஆசனத்தில் அமர்ந்திருக்கிருனே, தன்னை அழகாக அலங்கரித்தபடி. அவன்தான் இப்போது அவளுடைய காதலன்! அவள் செலவுக்காக ஆயிரம் தங்க நாணயங்களை வாரி இறைத்திருக்கிருன். இந்த நகரில் நல்ல செல்வாக்குள்ள பிரபல அரசாங்க அதிகாரி. அவன் பெயர் பிலாதினஸ்...!"

நண்பன் மத்தட்டின் இந்த வார்த்தைகளைக் கேட்டதும், ஜோசப் எழுந்து பிலார்தினஸைக் கவனித்தான்.

அந்த நேரத்தில் மேடையில் தொங்கிய பட்டுத் திரை விலகியது. நடனசாலையில் குழுமியக் கூட்டமே, 'உச்' கொட்டி மேடையைப் பார்த்துக் கொண்டிருந்தது.

ஒரு ரோஜாக் குவியலிலிருந்து ஓர் அழகி கையில் யாழுடன் குதித்தெழுந்து சபையை நோக்கி வணங்கிவிட்டுப் பாட ஆரம்பித்தாள். எங்கும் ஒரே கைத்தட்டல் ஆரவாரம் எழுந்து அதிர்ந்தது.

அந்த மதுரக் குரலில் ஒலித்த இனிப்புப் பாடலைத் தான் எங்கோ எப்பொழுதோ கேட்ட நினைவு ஜோசப்பிற்கு லேசாகத் தட்டியது. ஆழ்ந்து சிந்தித்தான்.

'ஆம். இதே தங்கக் குரலால் தீபேரியா வீதியை கட்டி நிற்க வைத்துத் தன் நெஞ்சையும் அபகரித்த அதே தங்கக் குரல்! அவளே தான் இங்கு வேறு பெயரில் உலாவுகிருளா? என் மேரி மக்தலா தாஞ அழகின் ஜோதி என போற்றப்பட்டு, அலெக்ஸாண்டரியாவையே ஆட்டிப்படைக்கிருள்?' என்று தன் மனதிற்குள் வியந்தான்.

இன்று பரிபூரண கவர்ச்சி வீசி கலை மெருகு மின்னி ஆடும் தன் மேரியை விழுங்கிவிடுவதுபோல், பதித்த தன் விழிகளை எடுக்காமல் பார்த்தபடியே வெகு நேரம் இருந்தான் ஜோசப்.

"என்ன ஜோசப்! நீரும் சொக்கி விட்டீரா? எப்படி இந்த சௌந்தரியவதியின், தேஜஸ்?" என்று மத்தட் குறும்பாக ஜோசப்பைக் கேட்டான்.

"இந்த சிற்ப வடிவழகியை ஐந்து ஆண்டுகளுக்கு முன்பே எனக்குத் தெரியும்?" என்ருன் ஜோசப் மேடையை ஊடுருவிப் பார்த்தபடி.

"முன்பே இவளை உனக்குத் தெரியுமா?"

ஜோசப் பிலாதினஸை அலட்சியமாகப் பார்த்தான். ஆனல் பிலாதினஸோ மேரி வனப்பின் கலை நய நளினத்தில் தன் மனதைப் பறிகொடுத்து மயங்கிக் கிடந்தான்.

ஜோசப் தன் பார்வையைத் திருப்பி மேடையில் ஓடவிட்டான். இன்று அபரிமிதமாக அழகு பூத்துத் தளதளப்பாக எல்லோரையும் கிறுகிறுப்பில் சுழலடிக்கும் சொர்ண பிம்பமாக மலர்ந்திருக்கும் மேரி-

யைப் பார்த்துப் பரவசமானுன் ஜோசப். எல்லோரது விழிகளேயும் பிடுங்கும் வெறி உணர்ச்சி விம்மும் அளவுக்கு மேரியின் நடனம் இன்று மாறியதை நினைத்து ஜோசப் ஒரு பக்கம் அச்சமடைந்தான். ஏதோ ஓர் அசுப சக்தி அவளிடம் ஐக்யமாகி அவளே அப்படி ஆட்டி வைக்கிறது என்றுகூட அவன் ஐயமடைந்தான்.

நடனம் முடிந்து தன் இருப்பிடம் வந்த ஜோசப் இரவு முழுவதும் தீரா மனப் புயலில் சிக்கித் திணறினுன். மேரியின் சபதத்தை நினைக்கும்போது அவன் நெஞ்சமே பதை பதைத்தது.

மறுநாள் தன் நண்பன் மத்தட் வழி காட்ட மேரி இருக்குமிடம் தேடி ஜோசப் போனுன். அவனேக் கண்டதும் திமீத்ரீயஸ் கட்டிப் பிடித்துக்கொண்டு நீண்ட நாள் பிரிவில் நிகழ்ந்த நிகழ்ச்சிகளேப் பற்றி பேசினுன்.

அவன் குரல் கேட்டு மேரி வெளியே ஓடிவந்து, "ஜோசப்!" என்று வாஞ்சை உந்தத் தாவிக் கூவி பரவசமாக நின்ருள்.

"நீங்கள் எவ்வித மாறுதலுமின்றி அப்படியே இருக்கிறீர்களே, ஜோசப்? ஊம். நிறையப் பொருள் குவித்து பெரிய மனிதனுகியிருப் பீர்கள். அப்படித்தானே?"

"என் வரைக்கும் எந்த மாறுதலுமில்லே, மேரி. ஆனுல், நீ?"

குறும்பாக அவளேப் பார்த்துச் சிரித்தான் ஜோசப்.

தன் பொற்கரத்தை, அவன் கரத்தில் தழுவவிட்டு, "அன்று மக்தலாவில் அறியா சிறுமியாக நான் இருந்தேன். ஆனுல், இன்று உலகை பூர்ணமாக அறிந்த பெண் நான், ஜோசப். அலெக்ஸாண்டிரியாவே இன்று என் காலடியில் கிடக்கிறது. செல்வ பூபதிகளும், அரசியல் தலேவர்களும் என் அழகை பூசிக்கும் பூசாரிகளாக மாறி தவம் கிடக்கின்றனர்" என்ருள் கம்பீரமாக.

"நேற்று உன் நடனத்தைப் பார்த்து நான் பரவசமடைந்தேன். மக்தலாவில் ஆடின மேரி அல்ல இன்று நீ. அலெக்ஸாண்டிரியாவின்

சௌந்தரிய தேவதை போல் ஜொலித்து கானத்திலும் நடனத்திலும் வார்த்தையில் அடங்கா வளர்ச்சியை எய்திவிட்டாய், மேரி".

"அப்படியா?"

மேரி குறுநகை செய்து கோணி ஆடி அவனை வலம் வந்தாள்.

"தோட்டத்தில் ஓடி உங்கள் இஷ்டப்படி பேசி குதூகலித்தாடுங்கள்"

திமீத்ரீயஸ் அவர்கள் இருவரையும் பலவந்தமாக அப்பால் போகச் செய்து குறும்பாகச் சிரித்தான்.

இருவரும் குழந்தைகளைப்போல் குதூகலித்தபடி தோட்டத்திற்கு ஓடிவந்து கொடி முல்லைப் புதரருகே அமர்ந்தனர்.

"ஏன், நீங்கள் அலெக்ஸாண்டிரியாவுக்கு வந்தீர்கள் ஜோசப்? என் மனதைக் கல்லாக்கி இந்த ஐந்தாண்டுகளும் தங்களைப் பாராது இந்நகரில் புதைந்துகிடந்தேன்......"

"உன் காதலைப் பெறவே நான் இங்கு வந்தேன். நீ இன்னும் என்னை மறக்கவில்லையே, மேரி? மனம் விட்டுச் சொல். எப்படித் தான் இது நாளும் என்னை மறந்து கல்லாகி கலை என்ற பொழுது போக்கில் மறந்து கிடந்தாயோ, சொல் மேரி."

அவன் நெஞ்சில் தன் தங்க முகத்தைப் புதைத்துத் தேம்பித் தேம்பி அழுதாள் மேரி. ஜோசப் எவ்வளவு தேற்றியும் அவள் பதிலே பேசவில்லை; அழுதுகொண்டேயிருந்தாள்.

"என்னை அறவே மறந்துவிடுங்கள், ஜோசப். அலெக்ஸாண்டிரியாவில் எப்படி நான் வாழ்கிறேன் என்பதையும், நீங்கள் கேள்விப்பட்டிருப்பீர்கள். நான் பதிதை. ஜோசப் நான் தூர்த்தை. அலெக்ஸாண்டிரியா அறிய அழகின் பைசாசம் நான்"

"என்னைக் காதலிப்பதால் உங்களுக்குத்தான் வாழ்வெல்லாம் தீராத் துயரம்......"

"ஆசை மிஞ்சி ஓடிவந்த என்னை இப்படி கைப்படைந்த வார்த்தைகளால் என் இதயத்தைத் தீய்த்தால்? என் மனைவியாக வாழ ஜெருசலேமுக்கு நீ வா, மேரி..."

மேரி அவனை இறுகத் தழுவியபடி, "என்னை தவிக்க விட்டுப் போகாதீர்கள், ஜோசப். இந்த உலகில் நீங்கள்தானே, என் இதய தெய்வம். என் வஞ்சம் தீரும்வரை நான் பேயாகத்தான் உலாவு வேன். இந்த விஷயத்தில் என் மனப்போக்குப்படி நீங்கள் விட்டுத் தான் ஆகவேண்டும். ஆமாம், காயிஸ் பிளாகஸைப் பார்த்தீர் களா?" என்றாள்.

"நான் இன்னும் அந்த அதமனைச் சந்திக்கவில்லை. இன்னும் இரண்டு வாரத்தில் அரசாங்க அலுவலினிமித்தம் இங்கு அவன் வரப்போவதாகக் கேள்விப்பட்டேன். சரி, மேரி! என் நண்பன் ஜீவகா காத்திருப்பான். உன்னை நாளை வந்து சந்திக்கிறேன்."

ஜோசப் போக எழுந்தான். மேரி தன் பவள இதழ்களை அவன் அழகு கன்னத்தில் பதித்து பெருமூச்சுடன் வழியனுப்பினாள்.

# 6

அலெக்ஸாண்டிரியாவில் ஒவ்வொரு ஆண்டும் மார்ச் மாதத்தில் டயானஸா கடவுளின் திருவிழா வெகு பிரபல்யமாகக் கொண்டாடுவார்கள். இது பாரம்பரியமாக நடந்து வரும் ஒரு பெருவிழா!

இந்த விழாவில் டயானஸஸ் கடவுளின் பாகத்தை அரசாங்க அதிகாரி ஏற்பான். அந்தக் கடவுளின் மனைவி அப்ரோதிட் பாகத்தை, தலைசிறந்த அழகி ஏற்பாள். கடவுள் கொல்லப்பட்டு மீண்டும் உயிர் பெறுவார். இருவருக்கும் திருமணம் நடக்கும். இந்த விழா நிகழ்ச்சி ஒரு நாடகம்போல் நிகழும். இதை மக்கள் கண்டுகளித்து குதூகலிப்பார்கள். தூர நகரிலிருந்தெல்லாம் இவ்விழாவை பார்த்து மகிழ மக்கள் திரண்டு வருவார்கள்.

இந்த விழாவைப் பற்றி திமீத்ரீயஸ் ஜோசப்பிற்கு விவரித்தான்.

“டயானஸஸ் பாகத்தை காயிஸ் பிளாகஸ் ஏற்கப் போகிறுன். அப்ரோதிட் பாகத்தை மேரி ஏற்கப்போகிறுள். இது முன்பே முடிவாகிவிட்டது. மேரி அன்று பிளாகஸைக் கொன்று தன் வஞ்சத்தை தீர்த்துக் கொள்ளப்போகிறுள்”

இதைக் கேட்டதும் ஜோசப் வெலவெலத்துப் போனுன்.

"இதில் ஈடுபடாமல் எப்படியாவது மேரியை நாம் தடுத்தாக வேண்டும்"

"யூத சட்டப்படி தன்னைக் கெடுத்த பிளாகஸை மேரி கொல்வது நியாயந்தானே, ஜோசப்?"

"ஆனுல், உரோமையர் சட்டம் அதற்கு இடம் தராது, திமீத்ரீயஸ். ஆளும் சர்க்காரின் சட்டத்திற்கு உட்பட்டே தீரும், யூதச் சட்டம்"

"இது எதில் போய் முடியுமோ? எனக்குப்பின் நீ தான் மேரியைக் காப்பாற்ற வேண்டும். என் உடல் நிலை அதிகம் தளர்ந்துவிட்டது. நான் அதிக நாள் வாழமாட்டேன்."

அடுத்த இரண்டு வாரத்தில் தான் சொன்னபடி திமீத்ரீயஸ் இறந்துபோனுன்.

டயானஸா பெருவிழா வெகு விமரிசையாக ஆரம்பமானது. காயிஸ் பிளாகஸ் டயானஸாகவும், மேரி அப்ரோதிட்டாகவும், வேடம் தாங்கி, விழா நிகழ்ச்சியில் பங்கெடுத்துக்கொண்டனர்.

மேடையில் திரையிடப்பட்ட இடத்திற்கு காயிஸ் பிளாகஸ் மேரியை அழைத்துப்போனுன்.

திடீரென்று பிளாகஸின் மரணக் கூக்குரல் கேட்டு எல்லோரும் பீதியடைந்தனர்.

திரையைக் கிழித்துக்கொண்டு ரத்தம் சொட்டும் கத்தியைத் தூக்கிப் பிடித்தபடி ஆவேச வெறி சிரிப்புடன் நின்ருள் மேரி. கூட்டத்தில் எங்கும் குழப்பம் குடிபுகுந்துவிட்டது. மேடையை அடுத்த மறைவிடத்திற்கு குதித்தோடினுள் மேரி.

காயிஸ் பிளாகஸ் நெஞ்சில் ரத்தம் ஆருகப் பீறிட, "என்னைக் காப்பாற்றுங்கள்" என்று அலறியபடி வெளியே ஓடிவந்தான்.

இதைப் பார்த்த ஜோசப், தன் நண்பன் ஜீவகாவுடன் மேரியைத் தேடி ஓடினன்.

மேரி அதே கத்தியைத் தன் நெஞ்சில் பாய்ச்சிக்கொள்ள ஓங்கினுள். ஓடிவந்த ஜோசப் அவளை எவ்வளவு தடுத்தும் கத்தி முனை அவள் நெஞ்சைக் கிழித்து உதிரத்தைக் கொப்பளிக்க வைத்து விட்டது. மேரி மூர்ச்சித்துக் கீழே விழுந்தாள். இந்த நேரத்தில் காயிஸின் குரல் கேட்டு, ஜோசப் திடுக்கிட்டுத் திரும்பினன்.

"கடவுளே, அவளுக்குத் தக்க தண்டனை வழங்கிவிட்டார். அவள் தானே தற்கொலை செய்துகொண்டாள்!"

காயிஸ் பிளாகஸுடன், பிலாதினஸும் நின்ருன்.

"நீ யார்? இங்கு என்ன வேலை?" பிலாதினஸ் கேள்விக்கு அலட்சியமாக ஜோசப் பதிலளித்தான்.

"நான் அவளுடைய குடும்ப வைத்தியன், அவள் நண்பனும் கூட. அவளுடைய ஆபத்தைத் தடுக்கவே நான் இங்கு ஓடி வந்தேன்..."

பிலாத்தினஸ், பிளாகாஸை நோக்கி வியப்புடன், "உம்மை ஏன் இவள் கொலை செய்ய நினைத்தாள்?" என்று கேட்டான்.

பிளாகஸ் பதிலற்று தளர்ந்து நின்ருன்.

"நான் பதில் சொல்லுகிறேன். இதே பிளகஸ்தான் அவளை முதலில் கெடுத்தார். கெடுத்தவரை கொலை செய்யலாம் என்பது யூதச் சட்டம். அதை நிறைவேற்ற மேரி முயன்றிருக்கிருள்."

ஜோசப் கம்பீரமாகப் பேசினன்.

"நான் அரசாங்க தலைமை அதிகாரி. நான் சொல்கிறேன்; ரோமையர் சட்டத்தில் இப்படி இல்லை. அதிலும் பொறுப்புள்ள அரசியல் அதிகாரியைக் கொலை செய்ய முயன்றவளுக்கு மன்னிப்பே கிடையாது. அவளுக்கு மரண தண்டனைதான். ஆனல், அவளே வலுவில் தண்டனையை ஏற்றுக் கொண்டு விட்டாள்."

இப்படிக் கடுமையாகக் கூறினுன் பிலாதினஸ். பிறகு தன் காவல் வீரர்களைக் கைதட்டி அழைத்து, "இவள் பிரேதம் இன்று இங்கேயே இருக்கட்டும். நாளை காலை ஏரிக்கரையிலுள்ள அரசியல் குற்றவாளிகளைப் புதைக்கும் கல்லறையில் இந்தப் பிரேதத்தையும் புதைத்து விடுங்கள்" என்று உத்தரவு போட்டுவிட்டு காயிஸ் பிளாகஸுடன் அப்பால் போனுன்.

ஜோசப் ஜீவகாவுடன் மூர்ச்சித்த மேரியைத் தூக்கிக் கொண்டு யாவருக்கும் தெரியாமல் இரவோடு இரவாகக் குதிரையில் வைத்து அகதடாமன் கால்வாய் கரைக்குப் பொழுது புலரும் நேரத்தில் கொண்டு வந்தான். அங்கிருந்து எந்த இடத்திற்கும் எளிதில் தப்பி ஓடிவிடலாம்!

இந்த நேரத்தில் ஹட்ஜா குதிரையினின்று மூச்சுவாங்க வந்திறங்கி, "எதிரிகள் யூதர்களை யெல்லாம் கைது செய்து சித்திர வதை செய்கிருர்கள். மேரியின் ப்ரேதத்தை ஒப்படைத்தால்தான், அவர்கள் விடுதலை யாவார்களாம்" என்று சொன்னுன்.

எல்லோரும் பீதியடைந்தனர். ஆனுல் ஜோசப் நெஞ்சு தளரவில்லை.

"நீங்கள் எல்லோரும் முதலில் போங்கள். நான் போய் அவர்களை விடுதலை செய்து விட்டு, தப்பி வந்து உங்களுடன் சேர்ந்து கொள்கிறேன்."

ஜோசப் தன் நண்பன் ஜீவகாவிடம் மேரியை ஒப்படைத்து விட்டு, உடனே பிலாத்தினஸைப் பார்க்க வந்தான்.

# 7

மக்களின் ஆரவாரமும், பெருத்த கூக்குரலும் எங்கும் எழுந்து நடனசாலையே குழம்பிக் கிடந்தது.

பிலாதினஸ் அருமையான பேச்சாளன். தன் பேச்சுத் திறமையால் மக்களின் கவனத்தை தன் பக்கம் இழுத்திருந்தான்.

"உரோமையரே! நீதி வேண்டுமானல் மேரியின் பிரேதத்தை சடுதியில் கொண்டுவந்து சேருங்கள். இல்லையேல்..."

"போதும், உமது வறட்டுக் கூச்சலும், ஆணவப் போக்கும். இதுவா நீதி? பெண்மையை நிர்மூலமாக்கியவனை தண்டிக்க வகையற்று, உம் சட்டம் ஓடி ஒளிந்து பேய்ச் சிரிப்பு சிரிக்கிறது!"

பிலோ, சட்ட நுணுக்கம் நன்கு தெரிந்த யூத கனவான். உணர்ச்சி குமுறிய அவன் ஆவேச பேச்சில் எல்லோரும் மயங்கி வாயடைத்து நின்றனர்.

பிலாதினஸ் துள்ளி வந்து ஆக்ரோஷமாக பிலோவின் கன்னத்தில் அறைந்தான். "வாயை மூடு!" என்று கோட்டானைப் போல் கொக்கரித்தான்.

இந்த நேரத்தில் ஜோசப் கொதிக்கும் கொப்பரையைப் போல குமுறி கூட்டத்தை விலக்கிக் கொண்டு உள்ளே வந்தான்.

"அநீதியின் பிரதி நிதியே! நிரபராதிகளை ஏன் வதைக்கிறீர்? மேரியை தப்பவைத்தவன் நான் தான்..."

பிலாதினஸ் திடுக்கிட்டுத் திரும்பி ஜோசப்பை சுட்டெரிப்பது போல் பார்த்தான்.

"மேரி உயிருடன் இருக்கிருளா? எங்கே, அவள்?"

"உம் கேள்வி இருக்கட்டும்" என்று அடித்துப் பேசிவிட்டு, ஜோசப் ஜனங்கள் பக்கம் திரும்பினுன்.

"அலெக்ஸாண்டிரியப் பெரியோர்களே! நீதிக்கும் நேர்மைக்கும் பெயர் போனவர்களே! கேளுங்கள், இந்தக் கொடுமையை. மேரி, கொலேகாரியாக மாறக் காரணம்? இதோ உங்கள் முன் நிற்கும் பிளாகஸைக் கேளுங்கள். இந்தப் பெரிய மனிதரே, அவளேக் கெடுத்த மா பாதகர். அவள் வஞ்சத்தை தீர்க்க முனேந்ததில் குற்றமில்லேயே, யூத சட்டத்தில்...?"

"ஆளும் சர்க்கார் யூதர் அல்ல, ரோமையர் என்பது நினேவிருக்கட்டும்"

பிலாதினஸின் கடுங் குரல் கேட்டதும், "யூதர்களேக் கொல்லுங்கள். அவர்களேத் தூக்கிலிடுங்கள்" என்ற பெருத்த கூக்குரல் கூட்டத்தில் எங்கும் எழுந்தது.

"நிறுத்துங்கள் உங்கள் குரலே! மதம் பிடித்த மந்தைக் கூட்டங்களே!"

அந்த நெருக்கடியான நேரத்தில் மேரியின் ஆவேசக் குரல் கேட்டு எல்லோரும் திடுக்கிட்டு நிமிர்ந்தனர். ஜோசப் வியர்த்து விறு விறுத்துத் துடியாய் துடித்தான்.

மேடையின் ஓர் மூலேயில் அலட்சியப் புன்னகை வீசி, கம்பீரமாக தேவதை போல் நின்ருள் மேரி.

எல்லோரும் ஆச்சரியத்தில் ஆழ்ந்து கிடக்கும் அந்த நேரத்தில் திடீரென்று மேரி ஆட ஆரம்பித்துவிட்டாள். இன்றைய ஆட்டம் தான் அவள் வாழ்நாளிலேயே கடைசி ஆட்டமோ என்று ஜோசப் ஆச்சரியப்படும் வகையில் வெறி பொங்க அவள் ஆடினுள். அங்கு குழுமிய அந்த மந்தைக் கூட்டமே, அவள் ஆட்டத்தில் தங்கள் மனதைப் பறிகொடுத்து அசந்து கிடந்தது.

ஜோசப் மெதுவாக ஒரு கண்ணோட்டம் செலுத்தினான். காவல் வீரர்கள் கைதிகளை விட்டு விட்டு மேடையருகே போய் மேரியின் நடனத்தைப் பார்த்துக் கூத்தாடிக் கொண்டிருந்தனர்.

ஜோசப் லாகவமாக நகர்ந்து போய் யூதக் கைதிகளின் தலைவன் பிலோவின் காதருகே ரகசியமாகச் சொன்னான்.

‘‘வீரர்களெல்லாம் மேரியின் ஆட்ட மயக்கத்தில் சொக்கி நிற்கின்றனர். தப்புவதற்காகவே அவர்கள் கவனத்தை தன்பால் இழுக்க இப்பொழுது மேரி ஆடிக் கொண்டிருக்கிறாள். நீங்கள் எல்லோரும் தப்பி ஓடிவிடுங்கள்.’’

பிலோ தன் சகாக்களுக்கு சைகை காட்டியதும், எல்லோரும் மெதுவாக நழுவி விட்டனர்.

மேரியின் நடனம் உச்சத்தை அடைந்ததும், எங்கும் கைத் தட்டல் ஆரவாரம் கோடை மழைபோல் எழுந்தது.

மேரி தன் ஆட்டத்தை முடித்துக் கொண்டு லாகவமாக வளைந்து வந்து ஜோசப்பின் மார்பில் சாய்ந்து கொண்டாள்.

கூட்டத்தில் சல சலப்பு பிறந்தது. யூதக் கைதிகள் ஒருவரும் அங்கு இல்லாததைப் பார்த்ததும் பிலாத்தினஸ் கொதிக்கும் கொப்பரையாகிவிட்டான். தன் காவல் வீரர்களைப் பார்த்து கடூரக் குரல் எழுப்பினான்.

‘‘முட்டாள்களே! ஆட்டத்தில் சொக்கி நமது காவல் கைதிகளை கைவிட்டு விட்டீர்களே?’’

பிறகு ஜோசப் பக்கம் வந்து, ‘‘எங்கே அவர்கள், ஏத்தர்களே? நீங்கள் இருவரும் இப்பொழுது என் கையால் சாகப் போகிறீர்கள்?’’ என்று பேய் போல அலறினான். அருகில் நின்ற வீரனின் உடை வாளை உருவி ஜோசப் மீது பாய்ந்தான் பிலாத்தினஸ்.

காயிஸ் பிளாகஸ் அவனை உடனே தடுத்து நிறுத்தி கடிந்து கொண்டான்.

‘‘மடையா, மேரியை நீ தாக்கினால் குழம்பி நிற்கும் கூட்டத்தினர் நம்மைத் துண்டு துண்டாக கிழித்தெறிந்து விடுவார்கள்.’’

"வைத்தியனைக் கொல்லுங்கள்" என்று கூட்டம் எங்கும் கொக்கரித்தது.

"இவளைச் செத்தவள் போல் மயக்கமடையச் செய்து எங்களை நீ ஏமாற்றினாய்?" பிலாத்தினஸ் படபடப்புடன் ஜோசப்பின் மீது குற்றத்தைச் சுமத்தினான்.

"பிளாகஸை குத்தி வீழ்த்துமாறு மேரியை நான்தான் தூண்டியவன். அவளுக்கு எந்த ஆபத்தும் நேராதிருக்கவே, அப்படி அவளை மயக்க மடையச் செய்தேன்?"

ஜோசப் வாதாடினான்.

"இது முழுப் பொய், எனக்கு இழைத்த கொடுமைக்குத் தக்க பழி தீர்க்கவே பிளாகஸை குத்தி வீழ்த்த நானே முயன்றேன்!"

மேரி எதிர்த்து வாயாடினாள்.

"நீர் இவளைக் கெடுத்தது உண்மையா?" பிலாத்தினஸ், பிளாகஸைக் கோபமாகப் பார்த்துக் கேட்டான்.

"அது எப்பொழுதோ நடந்த ஓர் விஷயம்; அது என் நினைவில் கூட இப்பொழுது இல்லை" என்றான் அலட்சியமாக பிளாகஸ்.

"யாருடைய குறைபாடும் இப்பொழுது எனக்குத் தேவையில்லை. மேரி உம்முடையவள். உம் விருப்பம் போல் எதையும் செய்யும்" என்று பிளாகஸைப் பார்த்து பிலாத்தினஸ் சொன்னான்.

"ஜோசப்பை இப்பொழுது என்ன செய்யப் போகிறீர்கள்?"

மேரி துள்ளி துடி துடிப்புடன் கேட்டாள்.

"யூத கைதிகள் தப்ப சாதகமாக இருந்த ஜோசப்பிற்கு மரண தண்டனை. இதுவே என் தீர்ப்பு..." பிலாத்தினஸ் அலட்சியமாக மேரியைப் பார்த்தபடி பதில் சொன்னான்.

"ஜோசப் இதற்கு பொறுப்பாளி அல்ல. நானே தான் என் நடனத்தால் தப்ப அவர்களுக்கு அவகாசமளித்தேன்."

கண் கலங்கிய மேரி காயிஸ் பக்கம் திரும்பி கெஞ்சினாள். இந்த அவள் விசித்திரப் பணிவு பிலாத்தினஸைக் கூட திகைக்க வைத்தது.

"ஜோசப்பைக் காப்பாற்றுங்கள். நான் இனி என்றும் உம் அடிமையாகக் கிடக்கிறேன். என்னிடம் நிறைய செல்வம் இருக் கிறது. என் ஜோசப் விடுதலையானல், நீங்கள் இருவரும் பங்கு போட்டு எடுத்துக் கொள்ளலாம்!"

மேரி செல்வம் என்றதுமே பணப் பேராசைப் பிடித்த பிலாத்தி னசுக்கு உடலெல்லாம் புல்லறித்தது.

ஜோசப் பொங்கி எழுந்து, "வேண்டாம் மேரி, நீ இந்த பிளாக ஸிடம் அடிமையாவதைவிட, என் உயிரை பலியிடுவதே மேல். நான் சொல்வதைக் கேள்" என்று கூறிவிட்டு அவளையே இரக்க மாகப் பார்த்தான்.

"என் பொருட்டு ஜோசப் கொடிய தண்டனை அடையக் கூடாது, என் குற்றங்களுக்கு நானே பொறுப்பாளி"

கண்ணீர் கொப்பளிக்க ஜோசப்பையே பாசம் மிஞ்சப் பார்த் தாள் மேரி. பிறகு வெடுக்கென்று தன் பார்வையை பிலாத்தினஸ் பக்கம் திருப்பி படபடப்பாகப் பேசினுள்.

"என்ன சொல்கிறீர்?"

"உம் கோரிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டு விட்டது, பிளாகஸ்! நீர் சாகும்வரை மேரி உம் அடிமைதான். அவள் சொத்துக்கள் பங்கு போடப்பட்டு நம் இருவரையும் சேரும்" என்று பணப் பேராசைப் பிடித்த பிலாதினஸ் தீர்ப்பு வழங்கினுன். பிறகு தன் வீரர்கள் பக்கம் திரும்பி, "அடுத்த கப்பலிலேயே இந்த ஜோசப்பை யூதேயாவுக்கு அனுப்பி விடுங்கள்" என்று கட்டளையிட்டான்.

ஜோசப் மனமுடைந்து திரும்பிப் பார்க்காமல், தன் நண்பன் ஜீவகாவுடன் தள்ளாடி வெளியே நடந்தான்.

மேரி முகத்தை மூடி கதறியழுதாள். பிளாகஸ் களிப்புடன் மேரியை இழுத்து அணைத்து பிலாத்தினஸுடன் மாளிகையை நோக்கி நடந்தான். உயிரற்ற பிரதேம் போல் உணர்வற்று அசைந் தாடி நடந்தாள் மேரி. உலகமே அன்ருேடு அவளுக்கு அஸ்தமன மாகி விட்டது போன்ற ஓர் பிரமை அவள் நெஞ்சில் வலுவாக குடி புகுந்துவிட்டது. அவள் ஆசைக் கனவுகள் இவ்வளவு சீக்கிரம்

உடைந்து உருக்குலைந்து, தன்னை நிர்மூலமாக்கிய வஞ்சகனிடமே இப்படி காலமெல்லாம் அடிமையாகி கண்ணீரில் வாழ்வோம் என்று அவள் கனவில்கூட நினைக்கவில்லை. இது விதியா அல்லது சதியா என்று தன்னை நொந்தபடி தூர பள்ளத்தாக்கை அடுத்த சாலையில் ஜோசப் தளர்ந்து செல்வதைப் பார்த்து புழுவாய் துடித்தாள் மேரி.

"என் சொக்குத் தங்கமே! இனி நாம் சதா சுகத்தில் தானே மிதக்கப் போகிறோம். உன் கண்ணீர் என் நெஞ்சோட்டத்தையே நிறுத்தி விடும்போல் இருக்கிறது, கனிரசமே. அழாதே, தோகை மயிலே!"

பிளாகஸ் அவள் கண்ணீரைத் துடைப்பதைப் பார்த்து, பிலாத்தினஸ் தன் முகத்தைத் திருப்பி குறும்பாக சிரித்துக் கொண்டான்.

ஜீவகா எவ்வளவு தேறுதல் சொல்லியும் ஜோசப் குனிந்த தலை நிமிரவே இல்லை. அவர்கள் ஏறிய கப்பலும் கரையை விட்டு வெகு தூரம் நகர்ந்தும், ஜோசப்பின் ஏக்க விழிகள் தீபேரியா கடற்கரையையே பார்த்த வண்ணமாக இருந்தன.

# 8

இடையில் ஆறு மாதங்கள் கண்ணீரைக் கொட்ட வைத்து ஓடி மறைந்தன.

ஓர் நாள் காலை. கதிரவனின் வெண்கதிர் முகத்தில் கொஞ்ச ஜோசப் தன் நந்தவனத்தில் ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கிக் கிடந்தான். அன்று கடைசியாக அலெக்ஸாண்டிரியாவின் நடனசாலையில்—தங்க மேகம் போன்ற சுருள் கேசம் மேலெல்லாம் படர, வெண் உடையில் ரோஜா முகம் வசீகரப் புன்னகை சிந்த, தந்தச் சிலை போல் தன் நெஞ்சில் தவழ்ந்து கிடந்த மேரியை, இன்னும் ஜோசப்பால் மறக்க முடியவில்லை.

அவளை நினைத்து அவன் கண்ணீர் சிந்தாத நாளே இல்லை. அப்பொழுது கலிலேயாவின் தலைநகரான செப்பேரிஸிற்கு பிளாகஸ் அரசியல் விஷயமாகப் போயிருந்தான். மேரி தனிமையில்தான் இருந்தாள். திடீரென்று ஓர் குருட்டு ஆசை அவன் நெஞ்சில் குமுறி எழுந்தது. ஜோசப் இப்பொழுது தன் கடின உழைப்பால் அதிக பொருள் சேமித்து வைத்திருந்தான். அரண்மனையில் தனித்திருக்கும் மேரியைத் தட்டிக்கொண்டு கண் காணாத தூர நாட்டிற்கு ஓடிவிட்டால்? ஆனால், தவறி பிடிபட்டால், இருவருக்குமே மரண தண்டனை அல்லவா கிடைக்கும்?

ஜோசப் குழம்பியபடி பித்து பிடித்தவன் போல் தனிமையில் உலாவிக் கொண்டிருந்தான்.

அப்பொழுது தோட்டத்தை நோக்கி வேலைக்காரன் ஒருவன் வேர்க்க விறுவிறுக்க ஓடிவந்தான். அவன் பரபரப்பைக் கண்டதும் ஜோசப் திடுக்கிட்டு உணர்வடைந்து நிமிர்ந்தான்.

"நிக்கோதேமஸ் பிரபு இன்று காலை ஆகாரத்தைத் தங்களுடன் அருந்த வருகிறாராம். இப்பொழுதுதான் தூதுவன் வந்து சொன்னான்."

"விருந்து பிரமாதமாக இருக்கவேண்டும், தாவுத். போ...... சீக்கிரம்..." என்று உத்திரவு போட்டுவிட்டு, ஜோசப் களிப்புடன் துள்ளி எழுந்து தன் நண்பனை வரவேற்க ஓடினான்.

நிக்கோதேமஸ் ஜோசப்பைவிட பத்து வயது மூத்தவன். சட்டம் பயின்ற ஆளும் யூதக் குழுவின் உறுப்பினன். அவன் விவேகமுள்ள சிறந்த அறிவாளி.

ஜோசப் நிக்கோதேமஸைக் கண்டதும் கரம் விரித்து ஓடினான். இருவரும் ஒருவரை யொருவர் அணைத்துக்கொண்டனர். நலம் விசாரித்தபின், அவர்கள் பேச்சு அரசியல் விஷயத்தில் திரும்பியது.

"கலிலேயாவில் ஏதாவது முக்கிய சேதியுண்டா? யூதர்களை உரோமையரிடமிருந்து விடுதலை செய்யாமல் எரோது இன்னுமுமா சதி செய்து கொண்டு இருக்கிறான்?"

ஜோசப் கேட்டதும் சிறிது நேரம் யோசித்துவிட்டு பதில் சொன்னான் நிக்கோதேமஸ்.

"மற்றவரைவிட ஏரோது ஒருவனே நல்லவன். தனிப்பட்ட முறையில் அவனுக்கு நான் மதிப்பளிக்கிறேன்."

"ஏன், போந்துபிலாத்து நல்லவராச்சே?"

"வர வர அவன் அதிகார வெறியேறி கோபக்காரனாகிவிட்டான். அவனுடைய உறவினன் பிளாகஸை கலிலேய மக்கள் அத்தனை பேரும் வெறுக்கின்றனர். அவன் மகா அயோக்கியனும். இதையெல்லாம் செப்பிரீயஸில் நான் இருந்தபோது கேள்விப்பட்டேன்."

இதைக் கேட்டதும் ஜோசப் மனதிற்குள் வேதனைப்பட்டான்.

"ஒரு நாள் ஏரோதின் அரண்மனையில் நடந்த விருந்திற்கு நான் போயிருந்தேன். அங்கு பிளாகஸுடன் தலை சிறந்த அழகி ஒருவள் வந்திருந்தாள். விருந்தில் எல்லோரும் அவளைப் பற்றித்தான் பலவிதமாக வெறுத்துப் பேசிக்கொண்டார்கள். ஆனால், அவளை எல்லோரும் மதிக்கிறார்கள். பிளாகஸின் அடிமையாம் அவள். எனக்கு அதைக் கேட்டதும் ஆச்சரியமாக இருந்தது. ஒரு ரோமையனை எப்படி ஒரு யூதப் பெண் காதலித்து அவனுடன் வாழ்கிறாள்?"

"தன் காதலனின் உயிரைக் காப்பாற்றவே நிர்ப்பந்தமாக அந்த அதமனின் ஆசை நாயகியாக அவள் மாற நேர்ந்துவிட்டது."

கண்ணீருடன் ஜோசப் தன் நண்பனிடம் நடந்தவற்றை யெல்லாம் விபரமாகச் சொன்னான்.

"அதமன் பிளாகஸைத் தன் சொந்தக் கணவன் போல் பாவித்து பணிந்து நடக்கிறாள், மேரி."

"அப்படியா?" ஜோசப்பின் விழிகள் ஆச்சரியத்தால் அகன்று விழித்தன.

"அந்த அளவுக்கு அவள் மனதை பரிபக்குவப்படுத்தியது நாசரேத்தில் புதிதாக போதகம் செய்துவரும் ஏசுவின் அறவுரைகள் தான்"

"ஊம். அவரை நீ நேரில் பார்த்தாயோ அவருடைய சொல் வன்மை அவ்வளவு தெளிவும் காந்த சக்தியும் உள்ளதாகவா இருக்கிறது......?" ஜோசப் வார்த்தைகளை அடுக்கிக் கொண்டே போனான்.

"பண இருமாப்பு நிறைந்த பிரபு வம்சத்தைச் சேர்ந்த நானே, என்னை மறந்து அவரைப் பின்தொடர ஆரம்பித்துவிட்டேன்..."

"அற்புதமாக யிருக்கிறது உன் பேச்சு"

"அவர்தான் **மெசியா** என்று எல்லோரும் நம்புகின்றனர்." ஜோசப் தான் அமர்ந்திருந்த இடத்திலிருந்து துள்ளி எழுந்தான்.

"ஜீபதி என்ற மீனவர் செல்வந்தனை ஒரு கேஸ் விஷயமாகச் சந்திக்க நான் கப்பர்னுமுக்குப் போயிருந்தேன். சைமன் என்ற மீனவர் தலைவன் ஏசுவின் சீடனுகிவிட்டதாக அப்பொழுதுதான் கேள்விப் பட்டேன்..."

"சைமனு? முன்பு ஒரு சண்டையில் தோளில் பலத்த காயம் பட்ட அவனுக்கு நான் சிசிச்சை செய்து காப்பாற்றினேன்!"

"சைமனையும் உனக்குத் தெரியுமா?"

"அந்த அதிசய மனிதர் ஏசுவை நானும் பார்க்கலாமோ?"

"அவசியம் நீ அவரைப் பார்க்கவேண்டும், ஜோசப்."

"புதுமைக் கருத்துக்களைப் போதித்து எல்லோரையும் மனிதர்களாக்க முயலும் அந்த புண்ணிய புருஷரை விரைவில் நான் சந்தித்தாக வெண்டும். சிகிச்சை யுக்தியின்றி, ஆத்ம பலத்தால் அற்புதமாக பிணியாளர்களை குணமாக்கும் விசித்திரச் செயல், வைத்தியத் தொழில் பயின்ற என்னை திணற வைக்கிறது. உண்மையில் அவர் மனிதர்களுக்கப்பாற்பட்ட தேவகுமாரனுகத்தான் இருக்க வேண்டும்?"

பிறகு அவர்கள் உரையாடல் சுவையான பல விஷயங்களில் வளைந்து ஓட ஆரம்பித்தது.

நிக்கோதேமஸ் அன்று மாலையே தன் ஊருக்குப் பிரயாணமானன்.

ஜோசப்பின் நெஞ்சிலே ஏசுவைப் பற்றிய இனிய கனவுகளே துள்ளிவிளையாட ஆரம்பித்தன. மனம் மாறிய தன் கனவு ராணியை நினைத்தும் அவன் கண்ணீர் விட்டான். இனி அவன் பொருளும், புகழும் வாரிக் குவித்து, என்ன பயன்?

மறுவாரம் ஜோசப் தன் வைத்தியசாலையில் நோயாளிகளுக்கு சிகிச்சை செய்துகொண்டிருக்கையில், மேரியின் இசைக் குழுவைச் சேர்ந்த ஹட்ஜா அங்கு வந்தான்.

ஹட்ஜாவைக் கண்டதும் ஜோசப் வெளியே ஓடி வந்து ஆனந்த மிகுதியால் அவனை அணைத்துக்கொண்டான்.

"செப்பரீஸில் அழகின் ஜோதி மேரி, தங்கள் வருகையை எதிர்பார்த்தபடி துடித்துக் கொண்டிருக்கிருள். மருந்துப் பெட்டியுடன் உடனே புறப்படுங்கள்"

ஹட்ஜா துரிதப்படுத்தியது ஜோசப்பை திடுக்கிட வைத்தது.

"மேரியின் உடம்பிற்கென்ன?" கண் கலங்கிய ஜோசப் துடி துடிப்பாகவே கேட்டான். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை.

"நாம் விபரமாக பேசிக்கொண்டிருக்க இது நேரமில்லை. நேரில் போனல் தெரிந்துகொள்கிறீர்கள்..."

சிறிதும் தாமதியாமல் உடனே குழம்பியபடி ஹட்ஜாவுடன் ஜோசப் பயணமானன்.

# 9

மறுநாள் காலை பிளாகஸ் அரண்மனையை ஜோசப் அடைந்தான். அங்கு அவனை போந்துபிலாத்துவும், அவன் மனைவி புரோக்குலாவும் வரவேற்றனர்.

"நீங்கள் சுகமாக விரைவில் வந்து சேர வேண்டுமென நாங்கள் இவ்வளவு நேரமும் இறைவனிடம் பிரார்த்தித்துக்கொண்டேயிருந்தோம். பிளாகஸ் மிகவும் ஆபத்தான நிலையில் இருக்கிறார்."

புரோக்குலா சோகமாகச் சொன்னது, ஜோசப்பை திடுக்கிட வைத்தது.

"காயிஸ் பிளாகஸா? மேரிதான் ஆபத்தில் இருக்கிறாள் என்றல்லவா, நான் பதறி இங்கு ஓடி வந்தேன்."

"பரிதாபப்படும் நிலையில் பிளாகஸ் துடியாய் துடிக்கிறார். மேரி அவரைப் பரிபூர்ணமாக மன்னித்துவிட்டாள்."

"மேரி, மன்னித்துவிட்டாளா?" ஆச்சரியத்தால் வாயடைத்துப் போனான் ஜோசப்.

"ஆமாம். ஏசுவின் அன்புரைகள் எல்லோரையுமே அடியோடு மாற்றியமைத்துவிட்டன."

புரோக்குலா பரவசமாகப் பதில் சொன்னாள்.

"மேரியும் அந்த ஏசுவைப் பின்பற்றுகிறாளா?"

"மேரி மட்டுமென்ன ? நீங்கள் கூடத்தான் மாறிவிடுவீர்கள்..."

இதைக் கேட்டதும் ஜோசப் மெய்சிலிர்த்து அப்படியே வெகு நேரம் நின்றுவிட்டான். பிறகு, பிளாகஸ் படுக்கையில் வீழ்ந்துகிடந்த அறைக்கு, புரோக்குலா ஜோசப்பை அழைத்து போனுள்.

சோகமே வடிவாக மேரி அங்கு நிற்பதைப் பார்த்ததும், ஜோசப் நெஞ்சு துடிக்க அவளையே பார்த்தபடி நின்ருன். சோகத்தில் அவள் எழில் முன்னிலும் வெகு சோபிதமாகத் தோன்றியது.

"ஜோசப்பைக் கண்ட மேரி ஆர்வம் பொங்க, "ஜோசப்" என்று கூவியபடி ஓடிவந்து அவனை வரவேற்ருள்.

அவள் பளபளக்கும் நீல விழிகள், பட்டுடல் எல்லாமே தன் ஜோசப்பைக் கண்டதும் ஓர் அலாதிக் களிப்பால் துடியாய்த் துடித்தன.

"மேரி!"

சிறிது நேரம் பேசமுடியாமல் அவன் நின்ருன். " உன் விசித்திரப் போக்கு எனக்கு மிகுந்த ஆச்சரியத்தையே அளிக்கிறது..."

"நீங்கள் ஆச்சரியப்படுவதும் நியாயம்தான், ஜோசப். 'உன் எதிரிகளை நேசி. கொடுமை புரிந்தவர்களின் சுகத்திற்காக இறைவனிடம் பிரார்த்தனை செய்'—ஏசுவின் இந்த பொன் மொழிகள் தான். அன்று வஞ்சத் தீயால் பற்றி எரிந்த எரிமலை மேரியை—இன்று அமைதியின் உறைவிடமாய் பனிப் பருவதமாக்கிவிட்டது."

மேரி தன் முகத்திரையை சரி செய்து கொண்டு, "வாருங்கள்" என்று அவனை பிளாகஸ் படுக்கை யறைக்கு அழைத்துப் போனுள். உடலின் ஒவ்வொரு அணுவும் கலையம்சம் துடிக்கும் மக்தலேன் இன்று பொறுப்புள்ள குடும்பப் பெண்ணுக மாறி பணிவும், பண்பும் ஒருங்கே பூத்துக் குலுங்க அவள் மாறியக் காட்சி அவனை பிரமிக்க வைத்தது! மௌனமாகி அவளைப் பின் தொடர்ந்தான்.

காய்ச்சல் அங்கமெல்லாம் பற்றி எறிய பிளாகஸ் நினைவு அற்றுப் படுக்கையில் சுருண்டு கிடந்தான். ஜோசப் குனிந்து அவன் உடல் நிலையைப் பரிசோதித்தான். பரிவாக நல்ல மருந்தாகக் கொடுத்தான். உண்மையாகவே அவனுக்கும் பிளாகஸ் மீது இரக்க உணர்ச்சி பிறந்துவிட்டது.

பிறகு தோட்டத்திற்கு எல்லோரையும் அழைத்து வந்த ஜோசப், "நோய் அணு அணுவாக இருதயத்தை அரித்து விட்டது. இனி இவர் பிழைப்பது என்பது துர்லபம். ஏதோ மனச் சாந்திக்காகத் தான் சிகிச்சை செய்கிறேன்" என்று கூறியபடி பெருமூச்சு விட்டான்.

எல்லோரும் வகை புரியாமல் தவித்தனர்.

# 10

அன்று மாலை வெளி வராந்தாவில் மேரியும், ஜோசப்பும் அமர்ந்து மனம் விட்டு பேச ஆரம்பித்தனர். வெகு நாட்களுக்கு பிறகு அநேக அனுபவ சோதனைகளைத் தாண்டி அந்த கனவுக் காதலர்கள் அன்றுதான் சந்தித்தனர்.

"உங்கள் எழில் உருவமே மாறிவிட்டதே, ஜோசப்! ஜெருசலேம் உங்களுக்கு ரொம்பவும் பிடித்து விட்டதா?"

மேரியின் கேள்விக்கு மௌனமாகி பெருமூச்சுவிட்டபடி ஜோசப் சிறிது நேரம் இருந்தான்.

"என் மேரி அடிமையாக இங்கு பிளாகஸின் அந்தப்புரத்தில் துடித்துக் கொண்டிருக்கும் போது, எனக்கு அங்கு எப்படி நாட்கள் இன்பகரமாக ஓடும்? ஊம். எப்படியிருந்தாலும் நீ அன்னியன் உடமை தானே, மேரி."

அவன் கண்கள் கலங்கின. மேரி அவன் வாயை மூடி குறும்பாகச் சிரித்தாள்.

"என் உடல் தான் பிளாகஸுக்கு சொந்தம். ஆனால், என் உள்ளம், உயிர், உடலெல்லாம் ஓடிக் கொண்டிருக்கும் என் ஆசைகள் எல்லாமே என் ஜோசப்பிற்குத்தான் என்றும் சொந்தம். அன்று தீபேரியா வீதியில் தங்களைப் பார்த்த முதல் பார்வையிலேயே என்னையே தங்களுக்கு அர்ப்பணித்து விட்டேனே?"

"என்னைக் காப்பாற்ற உன்னையே பரித்தியாகம் செய்து, கொடிய பிளாகஸுக்கு பணிவிடை செய்யும் அளவக்கு மாற்றி

அமைத்த அந்த ஏசுவின் சந்திப்பு எப்படி உனக்கு கிடைத்தது, மேரி?''

''ஒரு நாள் நான் கப்பர்னுமுக்கு போய்க் கொண்டிருக்கையில் மக்கள் கூட்டத்தின் மத்தியில் அழகே வடிவாய், முகத்தில் சாந்தம் தவழ அன்புரை கூறிக் கொண்டிருந்தார் அந்த ஏசு. என்னைக் கண்டதும் எல்லோரும், 'நாடறிந்த வேசி. தூர்த்தை, அதமனின் ஆசை நயாகி என்றெல்லாம் என்னை திட்டியபடி இரைந்தார்கள். ஆனால், அவர் அதை கவனித்ததாகத் தெரியவில்லை''

''ஊம்.'' நீண்ட பெருமூச்சு விட்டபடி அவள் சொல்வதை உருக்கமாக கேட்டபடியிருந்தான் ஜோசப்.

''உங்கள் சத்துருக்களை நேசியுங்கள். உங்களைப் பகைக்கிற வர்களுக்கு நன்மை செய்யுங்கள். உன்னை ஒரு கன்னத்தில் அடிக்கிறவனுக்கு மறு கன்னத்தைக் காட்டு. உன்னிடத்திலிருந்து உன் போர்வையைப் பறிக்கிறவனுக்கு உன் அங்கியையும் எடுத்துக் கொள்ள தடை செய்யாதே'—இந்த அவர் தங்கச் சொற்களைக் கேட்டதும் நான் கட்டுண்டவள் போல் என்னை மறந்து நின்று விட்டேன். அந்தக் கூட்டத்தினிடையே நின்ற சைமன் என்னைப் பார்த்ததும் ஓடிவந்து,'' இவர்தான் மெசியா, மேரி'' என்றார். அன்று முதல் ஏசுவின் போதனைகளைவிடாமல் பக்திப் பரவசத்துடன் நான் கேட்டு வரலானேன். இருள் அடைந்த என் இதயக் குகையில் ஓர் புது ஒளி பிறக்கத்தான் செய்தது.''

சிறிதுநேரம் மௌனமாக இருந்த மேரி, எதையோ நினைத்துக் கொண்டவள் போல் துள்ளி எழுந்து, ''பிளாகஸ் இருமுகிறார். வாருங்கள். அவர் அறைக்குப் போவோம்'' என்று கூறி ஜோசப்பை அழைத்தாள். அவளுடைய அற்புத மாற்றத்தைப் பார்த்த ஜோசப் புன்னகை பூத்தபடி அவளைத் தொடர்ந்து போனான்.

பிளாகஸ் ரத்தம் கக்கி பேச முடியாமல் தவித்தான். ஜோசப்பும் தனக்குத் தெரிந்த சிகிச்சை முறைகளையெல்லாம் கையாண்டு பார்த்து விட்டான். பிளாகஸின் கொடிய வியாதி, ஜோசப்பின் மருந்துகளையே சட்டை செய்யவில்லை.

இறுதியாக படுக்கை அருகே மேரியும், புரோக்குலாவும் அமர்ந்து பிளாகஸின் நற்சுகத்திற்காக இறைவனிடம் பிரார்த்திக்க ஆரம்பித்து விட்டனர்.

அந்த நேரத்தில் போந்துபிலாத்து அங்கு வந்தான். அவர்கள் நிலையைப் பார்த்ததும் கோபம் மீறி, அவன் எரிந்து விழ ஆரம்பித்தான்.

"புரோகுலா என்ன இது?"

"பிளாகஸ் சுகத்திற்காக ஜோகுவா தேவனைப் பிரார்த்திக்கின்றோம்."

மேரி தலை குனிந்தபடி பதில் சொன்னாள்.

"யூத கடவுளையா? ரோமையர் சட்டத்திற்கே இது முழு விரோதம். இனி உன் எசமானனின் கடவுளைத்தான் பிரார்த்திக்க வேண்டுமேயன்றி, யூத கடவுளை நீ நினைவால் கூட ஸ்மரிக்கக் கூடாது, மேரி!"

"எனக்கு முன் வேறு எந்தக் கடவுளுமில்லை என்று ஜோகுவா சொல்லியிருக்கிறார்."

"என்ன? நான் சொல்லியுமா ஆணவத்துடன் நீ ஆரம்பிக்கின்றாய்?" என்று இடிபோல் கத்தி, மேரி மீது பாய முயன்றான் பிலாத்து.

ஜோசப் அவனைத் தடுத்து நிறுத்தி, "உரோமையர் ஆட்சியில் தங்களுக்கு விருப்பமான கடவுளை யூதர்கள் வணங்கலாம் என்று அரசியல் சட்டத்திலும் இடம் இருக்கிறது. மேலும் மேரி ஒரு உரோமையனால் வளர்க்கப்பட்டவள். அவளுக்கு எந்த உரிமையும் இருக்கிறது. காயிஸுக்கு மட்டுமே அவள் உடல் அடிமை. அவள் உயிர் என்னைச் சார்ந்தது என்பதை நீங்கள் அறிய வேண்டும்" என்றான் உரக்க.

"உரோமையர் சட்டத்தை மீறுபவர்களுக்குத் தூக்குத் தண்டனை! நீ சட்டம் பயின்ற டாக்டரல்ல. உன் நல்ல உள்ளத்தை

நான் பாராட்டுகின்றேன். ஆனால், அரசியல் சட்டத்தை யாரும் அறிந்து பணிந்து தானே, நடக்க வேண்டும்...''

''என்னால் முடிந்தளவு முயன்று பார்த்துவிட்டேன். காயிலைக் காப்பாற்றுவது இனி வைத்தியன் கையில் இல்லை.''

ஜோசப் பேச்சை மாற்றியதும் பிலாத்துவின் கோபம் தணிந்தது.

மேரியின் மனதை புண்படுத்தும்படி எரிந்து விழுந்து விட்டேனே என்று உள்ளுக்குள் வருந்தியபடி, கனிவாகப் பேசினான் பிலாத்து.

''உன்னை வரவழைத்த மேரியை நான் ரொம்பவும் பாராட்டுகின்றேன், பாவம். அதிக துன்பத்தை மேரி அனுபவித்து விட்டாள். பிளாகஸின் சுகத்திற்காக பிரார்த்திக்கும் அளவுக்கு எப்படித்தான் இந்த பரித்தியாக எண்ணம் பிறந்ததோ?''

''கொடிய எதிரியாக இருந்தாலும் மன்னித்து நேசி' என்ற நல்ல தத்துவத்தைக் கூறிய அந்த ஏசுவின் போதனைகள் என்னை அறவே மாற்றி அமைத்து விட்டன...''

இந்தச் சமயத்தில் பிளாகஸ் கட்டிலில் துடித்துத் துவண்டான். எல்லோரும் திடுக்கிட்டு அவன் முகத்தருகே ஓடினர்.

பிளாகஸ் பேசத் துடித்தான். ஆனால் அவனால் பேச முடியவில்லை. எல்லோரையும் கண்கலங்க அவன் பலமுறைப் பார்த்தான். திடீரென்று அவனை ஓர் இழுப்பு இழுத்தது. வாயில் நுரைக்க மூடிய அவனுடைய கண்கள் பின்பு திறக்கவே இல்லை.

# 11

மூன்றும் நாள் பிளாகஸின் பிரேதம் அடக்கம் செய்ய எடுத்துச் செல்லப்பட்டது!

அந்தப் பிரேத ஊர்வலத்தில் பிளாகஸின் அடிமைகளும் பின் தொடர்ந்து செல்ல வேண்டும். கல்லறையில் பிரேதம் அடக்கம் செய்த பின்புதான் அடிமைகளுக்கு விடுதலை உண்டு என்பது பரம் பரை சம்பிரதாயம். அதன்படி மேரியும் மற்ற அடிமைகளுடன் போய்க் கொண்டிருந்தாள்.

ஜோசப்பும் ஊர்வலத்தை பின் தொடர்ந்தான்.

பிளாகஸை எல்லோரும் வெறுத்து வந்ததால், அவன் பிரேத ஊர்வலத்தில் கூட்டமே இல்லை.

நடுவழியில் திடீரென்று, "மேரி தூர்த்தை, பதிதை. அவள் சமூகத்தின் அவமானச் சின்னம். அவளைக் கல்லாலடித்துக் கொல் லுங்கள்" என்று எங்கும் ஆவேசமான ஓர் கூக்குரல் எழும்பியது.

ஜோசப், கூக்குரலிட்ட கூட்டத்திடையே புகுந்து ஓர் வயோதிக மாதிடம், "மேரி, பிளாகஸின் மனைவிபோல் வாழ்ந்தாள். இன்று அவன் பிரேத அடக்கத்திற்குப் பின், அவள் விடுதலை அடையப் போகிறாள். அவளை இப்படி அலங்கோலப் படுத்துவது நியாயமா?" என்று கேட்டான்.

"பிளாகஸ் உயிருடன் இருக்கும் வரைதான், அவள் உரோமை யுனின் ஆசை நாயகி. அவன் இறந்தபின், அவள் நாடறிந்த வேசி

யென மற்ற தூர்த்தைகளைப் போல, யூதச் சட்டப்படி அவளுக்கு தீர்ப்பளிக்கப்பட்டு கல்லால் எறிந்து கொல்லப்படுவாள்.”

அந்த வயோதிக மாது அலட்சியமாக பதில் சொல்லி அப்பால் போனாள்.

வாயடைத்த ஜோசப் மனம் புழுங்கி பிரேதத்துடன் கல்லறைக்குப் போனான்.

மறுநாள் காலை ஜோசப் மேரியை பார்க்க வந்தான். அப்பொழுது மேரி, பிளாகஸ் அரண்மனையை அடுத்துள்ள வசந்த மண்டபத்தில் அமர்த்து ஆழ்ந்த யோசனையில் மூழ்கியிருந்தாள்.

“மேரி! இனி நீ கூண்டுக் கிளி அல்ல, சுதந்திரப் பைங்கிளி. எந்தத் தடைகளும் உன்னைக் கட்டுப்படுத்தாது.”

ஜோசப்பைக் கண்டதும் மேரி, ஓடிவந்து அவன் நெஞ்சில் தன் முகத்தைப் புதைத்து ஆனந்தக் கண்ணீர் சிந்தினாள்.

“ஜோசப்!”

“என்னோடு ஜெருசலேமிற்கு வா, மேரி. அல்லது நானும் மக்தலாவில் தங்கிவிடுகிறேன். உன் விருப்பப்படி நாம் எங்கு வேண்டுமானாலும் போய் வாழ்வோம். எந்த சக்தியும் இனி நம்மைப் பிரிக்க முடியாது...”

“நாம் ஒருவரையொருவர் காதலிக்கிறோமாவென்று முதலில் நம் நெஞ்சையே கேட்டுக்கொள்ளவேண்டும்...”

“இன்னுமா உன் நேசன் ஜோசப் மீது உனக்கு சந்தேகம்? தேய்ந்து வதங்கி வரும் என் தோற்றத்தைப் பார். சதா உன் நினைவு, நெஞ்சை பொசுக்கும் அன்பு அக்னியாக பற்றி எரிந்து என்னை...”

சிறிது நேரம் மௌனமாக இருந்தாள் மேரி.

“என் ஜோசப் மீதா, எனக்கு சந்தேகம்? பிரார்த்தனையாலும், உபவாசத்தாலும் என் ஆத்மாவை தூயதாக்கிக்கொள்ள ஆசைப்படுகிறேன். ஜோசப், அப்பொழுதுதான் என் மனதில் நிம்மதி பிறக்கும். நாளை நான் மக்தலா போகிறேன்...”

"உண்மையாகவா, மேரி! இன்னும் எத்தனை நாளைக்குத்தான் என்னை பிரிவால் துடிக்க வைக்கப்போகிருயோ?" அவன் கண்கள் கலங்கின.

"கார்காலம் வரை அங்கு தங்கி ஏசுவின் அறவுரையைக் கேட்டு—தெய்வ வழிபாட்டில் என் சிந்தனையை தெளிவாக்குவதில் சிரத்தையாக இருக்கப்போகிறேன். வசந்த காலம் வந்ததும், நம் நெடு நாளைய கனவு நிறைவேற திருமணம் செய்துகொண்டு களிப் போம்..."

"மேரி!"

"மூன்று மாதம் என்னை தனிமையில் இருக்க அனுமதியுங்கள், ஜோசப். இந்த மேரி என்றும் உங்கள் சொத்துதானே? பாவக் கறைகள் என் நெஞ்சினின்று கரைந்து மறைய கொடிய ஜெபத்தில் மூழ்கி நான் எழவேண்டும்".

அவன் கரம் பிடித்து அவள் கெஞ்சி அழுதாள்.

அவனல் மறுக்க முடியவில்லை. சஞ்சலத்துடன் தலையசைத் தான்.

# 12

ஜோசப் மக்தலாவிற்கு வந்தபோது, குழம்பி நிற்கும் ஒரு கூட்டத்தின் முணுமுணுப்பை அவன் கண்டான். அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை. படபடப்புடன் அருகில் நின்ற ஒருவனை அழைத்து விபரம் விசாரித்தான்.

"யூதர்கள் ஒரு பெண்ணைக் கல்லெறிந்து இம்சிக்கிறார்கள்" என்றான் அவன் அலட்சியமாக.

ஜோசப் திடுக்கிட்டு சுற்றிலும் பார்த்தபடி, "அவள் யார்?" என்று ஆவேசமாகக் கேட்டான்.

"அவள் பிரபல நடன ராணியாம். அவள் பெயர் எனக்குத் தெரியவில்லை. பிளாகஸின் ஆசை நாய்கியாக இருந்து யூத குலத்தின் மானத்தை அடகு வைத்துவிட்டாளாம். அவளைப் பழி தீர்த்துக் கொல்லவே கல்லெறிகிறார்கள்."

"ஆ". ஜோசப்பின் அங்கமே பதறியது. சிறிதும் தாமதியாது தன் மேரியைக் காப்பாற்ற ஒரு வாடகைக் குதிரையில் அவன் விரைந்து போனான்.

மேரியின் வீட்டின் முன் ஆக்ரோஷ முற்ற கூட்டம் குமுறி அட்டகாசமாக நின்றது.

மேரி தன் வீட்டு வாயிற்படியில் அச்சமற்று நின்றாள். அவளுக்குப் பின்னால் ஹட்ஜா நின்றுகொண்டிருந்தான். மேரிக்கு முன்பாக கூட்டத்தைக் கனிவாகப் பார்த்தபடி சாந்தம் தவழ, அன்பே வடிவாக தெய்வீக புருஷர் ஏசு நின்றார்! நீர் பூத்த மேரியின் விழிகள் அந்தத்

தெய்வீக புருஷரின் காந்தம் கொஞ்சும் அன்பு மய விழிகளைப் பார்த்து வியந்தபடி இருந்தன.

ஜோசப் கூட்டத்தை விலக்கிக்கொண்டு முன்புறம் வந்து அவரையே பார்த்து ரசித்தபடி நின்ருன். அன்றுதான் ஜோசப் முதன் முறையாக அவர் காந்த வடிவத்தைக் கண்டு களித்தான்.

"போதகரே! பொருளுக்குப் போகமாக தன் உடலை விற்ற துர்த்தை—பதிதை இவள். மோயீசன் சட்டப்படி இவளைக் கல்லாலடித்துக் கொல்லவேண்டும்"

பரிசேயரும், ஆயக்காரரும் இப்படி அவரிடம் ஆர்ப்பரித்து வாதாடினுர்கள்.

ஏசு அவர்களைச் சாந்தமாகப் பார்த்தபடி புன்னகை புரிந்தார்.

"உங்களில் ஒரு குற்றமும் செய்யாதவன் எவனோ, அவனே முன்வந்து இவளைக் கல்லாலடித்துக் கொல்லலாம்."

ஏசுவிடம் எதிரியாக வாதித்த பரிசேயர், ஆயக்காரர்களின் வாய்கள் அடைபட்டன. முணுமுணுப்புடன் அவரைப் பார்த்துவிட்டு எல்லோரும் தலை குனிந்தனர். புன்னகை தவழ அவர் சாந்தமாக நின்ருர். வாயடைத்து நின்ற ஆயக்காரரும், பரிசேயரும் வகை புரியாமல் வந்த வழியே திரும்பினர்.

கூட்டம் கலைந்தது.

ஏசு திரும்பி கனிவாக மேரியைப் பார்த்தார்.

"பெண்ணே! உன்னை நிந்தித்து நிர்மூலமாக்க முனைந்தவர்கள், எங்கே இப்பொழுது?"

அவருடைய பரிவான சொற்கள் அவள் நெஞ்சையே உருக்கின.

"ஒருவருமே இல்லை, பிரபோ!" அவளால் பேச முடியவில்லை. தாரை தாரையாக அவள் விழிகளில் நீர்த்துளிகள் வழிந்தன.

"உன் குற்றங்களுக்காக பச்சாதாபப்படு. இனியாவது குற்றம் செய்யாமல் வாழ்க்கையை நடத்து."

அவளை ஆசீர்வதித்துவிட்டு அந்த அன்பின் எல்லை தன் சீடர்களுடன் புறப்பட்டுவிட்டார்.

ஜோசப் பிரமித்து அந்த காந்த உருவம் தூர மறையும் வரை பார்த்தபடியே இருந்தான். மேரி ஜோசப்பைப் பார்த்ததும் கைகொட்டி களிப்புடன் அவனருகே ஓடிவந்தாள்.

"ஜோசப்! நாளை நான் நாசரேத் போகிறேன். ஏசுவின் பொன்னுரைகளை சிறிது நாள் கேட்டு என்னையே நான் ஆத்ம சுத்தி செய்து கொள்ளப் போகிறேன்..."

"மேரி! நம் திட்டம்......" அவன் நெஞ்சு துணுக்குற்றுத் துடித்தான்.

"ஜோசப்! என்னை இந்த மந்தைக் கூட்டத்திடமிருந்து காப்பாற்றி என் குற்றங்களை மன்னித்த அந்த ஆதர்ச புருஷரின் அபூர்வ அமுதச் சொல், என் ஆருத இதயப் புண்ணுக்கு அரும்மருந்தாக ஆறுதலளிக்கிறது. அன்று இதே வீதியில் வயிற்றுப் பிழைப்புக்காக நான் ஆடிய போது வாய்பிளந்து நின்றக் கூட்டம்—அன்று நிராதரவான என்னை நிர்மூலமாக்கிய பிளாகஸை எதிர்த்து என்னைக் காப்பாற்றத் தெம்பில்லாத இந்த வக்கிரக் கூட்டம்—எனனை இன்று கல்லாலடித்துக் கொல்லத் துணிந்துவிட்டது. இந்த முட்டாள் கூட்டத்திடமிருந்து என்னைக் காப்பாற்ற எவனுக்கும் திராணியில்லாதபோது—தீரத்துடன் முன்வந்து, ஒரே வார்த்தையில் அத்தனைபேரது வாயையும் பூட்டி வெலவெலக்க வைத்தார் அவர். என் குற்றங்களுக்கு யார்தான் இந்த உலகில் மன்னிப்பு அளிப்பர், ஜோசப்!"

ஜோசப் பேச முடியாமல் ஏசுவை நினைத்தபடி பரவசமாகி நின்ருன்.

"நம் எண்ணம் நிறைவேறத்தான் போகிறது. இவ்வளவு காலம் பொறுத்த தாங்கள், இன்னும் சில நாட்கள் பொறுக்கக் கூடாதோ?"

"என் வாயை மூடி நெஞ்சை கல்லாக்கி விடுகிருய். நான் சொல்ல என்ன இருக்கிறது?"

மேரி அனுதாபத்துடன் அவனைப் பார்த்தாள். ஜோசப் மௌன மாகி மேரியைப் பின் தொடர்ந்தான்.

மேரி தன்னை விட்டுப் பிரிந்து ஏகாந்த வாழ்க்கையை மேற் கொண்டதுமே, ஜோசப் மன முடைந்து தன் வைத்தியத் தொழிலில் பிடிப்பில்லாமல் தான் வாழ்ந்து வந்தான். பிளாகஸ் இறந்த பின்பாவது விடுதலையான மேரி, தன்னை மணந்து தன் இருண்ட வாழ்வில் ஒளியேற்றுவாள் என்ற கடைசி நம்பிக்கையும் அவன் நெஞ்சினின்று நெகிழ ஆரம்பித்தது. தன் உயிர் நண்பன் ஜீவகா வைத்தியத் தொழிற் பயிற்சி சம்பந்தமாக தூர ஊருக்கு பிரிந்து போனது வேறு, ஜோசப்புக்கு அதிக தளர்வை அளித்து விட்டது.

அன்று ஜோசப் பிறந்த நாள்!

தன் பிறந்த நாளை மிகச் சிறப்பாக கொண்டாடவேண்டுமென்ற நப்பாசை அவன் கைப்படைந்த உள்ளத்தில் துளிர் விட்டது.

பிரபலஸ்தர்களுக்கெல்லாம் அழைப்பு அனுப்பிய ஜோசப், தன் மேரிக்குமட்டும் அனுப்பவில்லை. பிரார்த்தனையிலும் உபவாசத்திலுமே இறை பக்தியில் நாட்களை கழித்துக் கொண்டிருக்கும் அவளுக்கு அனுப்ப அவன் விரும்ப வில்லை.

அழைப்பை ஏற்று ஜீவகாவும் விழாவில் கலந்து கொள்ள வந்தான். பல நாட்களுக்குப்பின் ஜீவகாவைப் பார்த்த ஜோசப், ஆர்வமாக ஓடி நண்பனைத் தழுவி பூரிப்புடன் வரவேற்றான்.

விருந்து முடிந்ததும் இருவரும் தோட்டத்தில் அமர்ந்து பல பிரச்சினைகளைப் பற்றி விவாதிக்க ஆரம்பித்தனர்.

"ஜீவகா புதிய ஊரில் நீ வைத்தியத் தொழில் நடத்தியபோது நடந்த சுவையான சம்பவங்களைப் பற்றி சொல்லேன்ப்பா....."

ஜோசப் அவனைப் பிடித்து உலுக்கினான்.

ஏக்கத்தால் மெலிந்த ஜோசப்புக்கு ஊக்கம் கொடுக்க தன் வைத்திய அனுபவங்களை யெல்லாம் ரசமாக சொல்ல ஆரம்பித்தான் ஜீவகா.

"திதிமுஸைப்பற்றி உனக்குத் தெரியுமா, ஜோசப்?"

"யார், தோமாஸைச் சொல்கிருயா ? ஏசுவின் சீடர்களில் அவர் ஒருவர் என்று மேரி சொல்லக் கேட்டிருக்கிறேன். விபரமாக அவரைப்பற்றி எனக்கு யாதொன்றும் தெரியாது."

"அவர் தங்கமான குணமுள்ளவர். வாதம் செய்வதில் வல்லவர். எஃகு உள்ளம் படைத்தவர். ஆனல் அவர் பெரிய சந்தேகப் பேர் வழி. எதையும் எளிதில் நம்பக் கூடாதவர்."

"விசித்திரமான மனிதர், போலிருக்கே ? இத்தகைய சந்தேகப் பேர்வழிகளுக்கு வியாதி வந்து விட்டால் எந்த மருந்தையும் நம்பாது மனே வியாதியஸ்தர்களாக வல்லவா மாறி விடுவார்கள் ?"

"அதை ஏனப்பா கேட்கிருய்? அந்த மனிதருக்கு கடுமையான காய்ச்சல் வந்து விட்டது. அவர் உறவினன் ஒருவன் வந்து என்னை, தன் இல்லத்திற்கு அழைத்துப் போனுன். முதலில் என் வைத்தியத்தில் அவருக்கு நம்பிக்கை ஏற்படவில்லை. என் வய்து அவருக்கு பெரிய சந்தேகத்தை அளித்து விட்டது. பலவந்தமாக நான் மருந்தை கொடுத்தேன். மூன்றே தினங்களில் அவர் பரி பூர்ண குணமாகி எழுந்ததும் என் வைத்தியத் திறமையில் அவருக்கு சந்தேகம் எழுந்து விட்டது. பிறகு அந்த சுற்று வட்டார மக்களெல்லாம் என் திறமையை பாராட்டியதைப் பார்த்ததும் தான் அவர் சந்தேகம் தீர்ந்தது. பிறகு அவர் என்னேடு நெருங்கிப் பழக ஆரம்பித்தார். என் இந்திய நாட்டின் சிறப்பைக் கேட்டறிந்து போற்றினுர். எங்கள் நாட்டை பார்க்க வேண்டுமென்பதில் அவருக்கு கொள்ளை ஆசை."

"நான் தான் உன்னேடு வர முடியாமல் இருக்கிறேன். அவரையாவது உன் நாட்டிற்கு அழைத்து நீ போவது தானே?"

"எனக்கு ஆசைதான். அவர் வரவேண்டுமே? மேலும் அவர் ஏசுவையே ஒட்டித் தொடர்ந்து பணியாற்றி வருகிருர். ஆமாம். ஏசுவை சிலுவையில் அறைந்து கொன்று போட ஆசாரியர்கள் ரகசிய திட்டம் போட்டிருக்கிருர்களாமே ?"

"நல்லது சொல்லி பிறர் குறைகளைக் கண்டித்தால், அதமக் கூட்டத்திற்கு ஆத்திரம் வருவது இயல்பு தானே ?"

"பிலாத்து நேர்மையானவன். இந்த விதண்டா கூட்டத்தின் வீண் கூச்சலுக்கு தலைசாய்க்கவே மாட்டான்."

"சதிகாரர்கள் பிடிக்கு எந்த நேர்மையாளனும் மனம் சரிந்து தலையாட்டித்தானேயாக வேண்டும்?"

"ஹூம். யூதேயா மக்களே சிந்திக்கத் தெரியாத ஓர் மந்தைக் கும்பல்! குரல் கேட்ட திசை யெல்லாம் கொக்கரிக்கும் ஓநாய்க் கூட்டம். அன்று அபலை மேரியின் வாழ்வு பறிபோனதைப் பார்த்துக் கொண்டிருந்த உதவாக்கரைகள் தானே? 'நானே உலகின் ஒளி; நானே உலகின் ஜீவன்' என்று அறை கூவி, மனிதனே நீ உலகுக்கு ஒளியாகவும், பூமிக்கு உப்பாகவும் பரித்தியாக வாழ்க்கையை நடத்து என்ற புதுமைக் கருத்துக்களை தூவும் புரட்சிப் போதகரை வாழவிடுவார்களா?"

அப்பொழுது நிக்கோடமஸ் அவர்களை நோக்கி வந்தான். அவனைக் கண்டதும் தங்கள் பேச்சை நிறுத்தி எழுந்து ஆர்வமாக இருவரும் வர வேற்றனர்.

"என்ன! இரு வைத்தியர்களும் மூலிகை ஆராய்ச்சியில் மூளை குழம்பி யிருக்கிறீர்களோ?"

ஆராய்ச்சியில் நாங்கள் மூளை குழம்பவில்லை. முட்டாள் கூட்டத்தை நினைத்துத்தான். ஆமாம் விருந்திற்கு இவ்வளவு நேரம் தாமதித்தா வருவது? நாங்கள் எதிர்பார்த்து எதிர் பார்த்து."

"வரும் வழியில் ஒரே ஜனக் கும்பலும், குழப்பமுமாக இருந்தது. சரி, இந்தா உன் பிறந்த நாள் பரிசு!"

நிக்கோடமஸ் ஒரு தங்க பேழையையும், ஒரு துணி மூட்டையையும் கொடுத்தான். பேழையையும், மூட்டையையும் திறந்து பார்த்ததும் ஜோசப் ஆச்சரியத்தால் துள்ளிக் குதித்தான்.

"ஆ! இதயத்தைப் பறிக்கும் முத்துக்கள்—பட்டுத் துணிகள்"

"இந்திய வியாபாரிகளிடமிருந்து நான் இவைகளை அதிக பொருள் கொடுத்து வாங்கினேன். முத்துக்களை உன் மேரிக்கு கொடுத்து விடு. பட்டுத் துணிகள் உங்கள் இருவரது திருமண உடைக்கு அலங்காரம் செய்ய உதவு மல்லவா?"

ஜோசப் பூரிப்பால் தலை குனிந்தான். ஜீவகா தன் நாட்டுப் பொருள்களை இதயம் குளிர இருகையாலும் எடுத்துக் கண்களில் ஒத்திக் கொண்டான்.

"ஏசு கைதானது பற்றி உங்களுக்குத் தெரியாதா ?" நிக்கோடமஸ் இப்படிக் கேட்டதும், நெஞ்சில் அம்பு பாய்ந்தவன்போல் துள்ளி எழுந்தான் ஜோசப்.

"ஏசு கைது செய்யப்பட்டாரா ?"

"உன் பிறந்து தின விழா ஜோரில் வெளியில் நடப்பதே தெரியாமலிருக்கிருய். ஆரே அமளியாக இருக்கிறது. பெண்கள் கூட்டத்திடையே மேரி தலைவிரி கோலமாய் கதறிக் கொண்டிருக்கும் காட்சியை நான் வரும் வழியில் பார்த்து வந்தேன்."

"ஆ". வேகமாக வெளியே புறப்பட்டான் ஜோசப்.

"ஜீவகா! வா, ஏசுவை மீட்க முயல்வோம்"

ஜீவகா ஜோசப்பை பிடித்து நிறுத்தினன். "ஜோசப்! அன்று பிளாகஸிடமிருந்து மேரியை மீட்க முடியாத நாம்".

ஜீவகாவின் இந்த சொல்லடி ஜோசப்பை தலை கவிழ வைத்தது. தளர்ந்தாலும் அவன் ஓடுவதை நிறுத்த வில்லை.

ஜோசப்பை தொடர்ந்து ஓடினன் ஜீவகா. நிக்கோடமஸும் அவர்களைப் பின் தொடர்ந்தான்.

ஜோசப்பைக் கண்டதும் மேரி வாய் விட்டுக் கதறி அழுதாள். ஏறிட்டு பிலாத்துவின் அரண்மனையை ஜோசப் பார்த்தான். வாயில் புறத்தில் அட்டகாசமாக ஆரவாரிக்கும் ஜனத்திரளைக் கண்டு அவனே திகைத்து தயங்கி நின்று விட்டான். ஜீவகா அவனைக் குறும்பாகப் பார்த்தான்.

'மிருக வெறி பிடித்த இந்தக் கூட்டத்திடமிருந்து நாம் எந்த நீதியையும் எதிர்பார்க்க முடியாது' என்று தன் நண்பனுக்கு சுட்டிக் காட்டுவது போலிருந்தது ஜீவகா ஜோசப்பைப் பார்த்த பார்வை!

# 13

இடையில் ஓர் ஆண்டு ஓடி மறைந்தது.

அன்று கதிரவன் பிரகாசிக்கவில்லை. காற்று மூச்சிடவில்லை. செடி, கொடி, மரங்கள், யாவும் அசைவற்று நின்றன. சகல ஜீவ ராசிகளும் விழி மூடாது ஸ்தம்பித்து விட்டன.

கொல்கொத்தா குன்றின் உச்சியில் இரு கள்வர்களிடையே ஏசு சிலுவையில் தொங்கிக் கொண்டிருந்தார். ஏராளமான பெண்களும் ஆண்களும் அழுது கொண்டிருந்தனர்.

மேரியும் தன் ஜோசப் அருகே கண்ணீர் சிந்தியபடி நின்றாள்.

"விஷத்தில் திரளாத நாகரத்தினம். பூச்சி வயிற்றில் பூக்காத நன்முத்து. கிரணபேதமில்லாத சந்திரன். எங்காவது உண்டா மகளே? பாவத்தில் பிறந்த மனித குலம் பாவத்தில் உழன்று பின்பு பச்சாதாபக் கண்ணீரால்தானே, பரவசமடைய வேண்டும்? இதோ நான் சிந்தும் ரத்தத் துளிகளைப் பார். நான் அனுபவிப்பதெல்லாம் யாருக்காக? இதை உணர்ந்தாவது சகிப்பை ஆயுதமாகக் கொண்டு, புதுமைப் பெண்ணாக வாழ்!" என்று ஏசு சொல்வது போல் அவளுக்கு பிரமை ஏற்பட்டது.

இந்த நேரத்தில் சிலுவையில் தொங்கும் ஏசுவின் தீனக்குரல் அவளையும், ஜோசப்பையும் கவர்ந்திழுத்தது. இருவரும் உற்றுக் கேட்டனர்.

**"பிதாவே! இவர்களை மன்னித்தருளும் ஏனெனில் தாங்கள் செய்கிறது இன்னதென்று அறியாதிருக்கிறார்கள் !"**

ஜோசப் உடலெல்லாம் சிலிர்த்தது. மேரி அவனைப் பிடித்து உலுக்கினாள். அவனால் பேச முடியவில்லை. கண்மூடி கண்ணீர் சிந்தினான்.

"ஜோசப்! ஆடிப்பாடி பிழைத்து மானம் குலைந்து வெறி நாயாக மாறி, பின்பு அடிசறுக்கி அதமனுக்கு ஆசை நாயகியாகி வெந்து சாம்பலான என்னை, தன் அன்புரைகளால் புதுமைப் பெண்ணாக்கி கொடுமையாளர்களிடையே என் பாவங்களை மன்னித்து, என்னை பச்சாதாபப் படவைத்த அந்த நல்ல ஏசு கூறிய அற்புத மொழிகளைக் கேட்டீரோ, ஜோசப்! ஜோசப். இனி நாம் அவரது அன்பு மொழி அகிலமெல்லாம் பரவ பாடு படுவோம். மனித குலத்தின் பிணியைப் போக்கும் வைத்தியத் தொழில் செய்யும் நீங்கள், என்னுடன் கலந்து அறிவுத் தொண்டிலும்' ஒத்துழையுங்கள். நாம் நமக்காக அல்ல— பிறர் நலத்திற்காக பணி செய்வோம்!"

"மேரி!"

ஜோசப்பால் பேச முடியவில்லை. பரவசமாகி நின்றான்.

அந்த நேரத்தில் மீண்டும் ஏசுவின் தீனக்குரல் எழுந்து அடங்கியது.

"பிதாவே! என் ஆத்துமத்தை உம்முடைய கரங்களிலே ஒப்படைக்கின்றேன்."

அதமர்களிடையே அற்புத ஒளி பரப்பிய ஏசுவின் ஆவி பிரிந்தது. தலை தாழ்ந்து தொங்கியது.

ஜோசப் கைகளால் முகத்தை மூடிக் கொண்டு தேம்பித் தேம்பி அழுதான்.

"எங்கள் நல் ஏசுவே !"

மேரியின் கூக்குரல் கொல் கொத்தா குன்றிலிருந்து தூர இட மெல்லாம் பரவி எதிரொலித்தது. இருளில் மூழ்கிய புவனமே துயரம் தாங்காமல் மௌனத்தில் ஆழ்ந்து கிடந்தது.

நடுப்பகலில் ஜோசப், பிரேதத்தை எடுத்து கல்லறையில் அடக்கம் செய்ய உத்திரவு பெற்ற வர பிலாத்துவிடம் ஓர் தூதுவனை அனுப்பினான். அரிமாத்யாவைச் சேர்ந்த அவன் மாமன் ஜோசப்பும் அங்கு வந்து, அவனுடன் சேர்ந்து கொண்டான்.

போன தூதுவன் வந்ததும் செந்தூரியனிடம் பிலாத்துவின் உத் திரவைக் காட்டினர். சிலுவையினின்று பிரேதத்தை எடுத்து இறக்க அவர்களுக்கு அவனும் உதவினான்.

"இவர் உண்மையில் கடவுளின் குமாரர். நீங்கள் பிரேதத்தை கல்லறையில் அடக்கம் செய்ததும் நகரை விட்டே தப்பி ஓடி விடுங் கள். மதாச்சாரியார்கள், ஏசுவின் அபிமானிகளை எல்லாம் கொன்று போட கங்கணம் கட்டியிருக்கின்றனர்" என்று எச்சரித்தான் செந்தூ ரியன்.

"உங்கள் உதவிக்கும், எச்சரிக்கைக்கும் எங்கள் நன்றி. ஆண் டவர் உங்களை ஆசீர்வதிப்பார்!" ஜோசப் பெருமிதத்துடன் செந் தூரியனுக்கு நன்றி தெரிவித்தான்.

மேரியும், ஜோசப்பும், மற்றவர்களும் சேர்ந்து வெண் துணியில் பிரேதத்தை சுருட்டி பரிமள தைலங்களைத் தெளித்து, நறுமலர்களைத் தூவி, கல்லறையில் அடக்கம் செய்வதற்கான சடங்கிற்கு தயாராக் கினர்.

# 14

அடக்க தினம் குறிக்கப்பட்டது. மறுநாள் சட்டப்படி ஓய்வு நாள்!

சிதறியோடியவர்கள் எல்லாம் ஜெருசலேமுக்கு ஏழு காத தூரத்திலுள்ள எம்மாவில் கிளியோபாஸ் வீட்டில் குழுமியிருந் தனர்.

ஓய்வு நாளே அடுத்த மறுநாள் உதய நேரத்தில் எல்லோரும் ஏசுவின் கல்லறைக்கு வந்தனர்.

வரும் வழியில் ஜோசப் மேரியிடம், "ஏசு மரித்து விட்டார். இனி நம் எதிர் கால திட்டமென்ன, மேரி?" என்று ஜோசப் மணப் பேச்சை ஆரம்பித்தான்.

"நமது உறுதி மொழிப்படி நாம் ஒன்ருகி விட்டோம். இனி என்றும் நாம் இணை பிரியோம்......"

"ஆனல், முன்பு போல் நாம் சுதந்திரமாக சனதனிகளின் கழுகுக் கண்கள் முன் வாழ முடியுமா, மேரி?"

"ஏசுவுக்காக எதையும் நாம் இணைந்து ஏற்போம், அன் பரே!......"

எல்லோரும் பிரேத அடக்கத்திற்காக சில பொருள்கள் வாங்க நகருக்குச் சென்றனர். மேரி மட்டும் பிரேதம் பாதுகாப்பாக இருந்த கல்லறைத் தோட்டத்திற்குப் போனுள்.

என்ன ஆச்சரியம்! பல பலசாலிகள் தூக்கி மூடிய பெரும் கல்லறை மூடு கருங்கல் தூர கிடந்தது. கல்லறையில் ஏசுவின்

அன்புப் பிரேதமில்லை. பிரேதத்தை மூடியிருந்த வெண் துணிகள் மட்டும்ரத்தக் கறைகளுடன் கிடந்தன.

மான்போல் பூந்தோட்டமெல்லாம் துள்ளி ஓடினுள் மேரி. ஆடினுள்; பாடினுள்.

"அமலன் உயிர்த்தெழுந்து விட்டார். என்னை மன்னித்து ஆட்கொண்ட அன்பரசர் தன் சொல்லைச் செயலாக்கி எழுந்து போய் விட்டார். ஜோசப்... ஜோசப்..."

மேரியின் கீதகுரல் கேட்டு எல்லோரும் வியர்க்க விறு விறுக்க ஓடிவந்தனர். அவள் ஆனந்த தாண்டவத்தைக் கண்டு ஒன்றும் புரியாமல் எல்லோரும் விழித்தனர்.

ஜோசப்பின் பார்வை கல்லறைக் குகையில் விழுந்தது.

"ஆ!" எல்லோரும் வாயடைத்து நின்றனர்.

ஜோசப் ரத்தக் கறை படிந்த துணியை எடுத்து பரிசோதித்தான். அவன் கண்களில் பரவசக் கண்ணீர் வெடித்தது.

"அவர் உடலும் உயிருமாக உயிர்த்துப் போகும் காட்சியைக் கண்டேன், நான்". மேரி குதூகலித்துக் கூறினுள்.

"ஆனுல், உலகச் சட்டம் உன் கூற்றை நிதர்சனமாக கண்டறியாது ஒரு நாளும் ஏற்காது, மேரி......"

"இல்லை ஜோசப், எனக்கோ அல்லது நம்மில் யாருக்காவது அவர் தரிசனம் தந்து தம்மை நிச்சயம் நிரூபிப்பார்......"

"நம் நம்பிக்கை மேலும் தழைக்க பிரார்த்தனை செய்வோம், மேரி சிறிது நாள் உன்னை பாதுகாக்க வேண்டும்..." ஜோசப் அவளை பரவசமாக பார்த்தபடி நின்றுன்.

"ஏன்?" என்று வியப்பாக கேட்டாள்.

"உன்னுடைய பக்திப் பரவச எதிரொலி மதாச்சாரியார்களின் காதில் விழுந்தால், உன்னை கொன்று போட்டு விடுவர்..."

"அசடர்களுக்கு நான் அஞ்சேன். அண்ணலின் அருள் தாண்டவத்தை அவனிக்கு அறை கூவுவேன். சரி, நான் எம்மாவில் உங்களுக்காக காத்திருக்கிறேன். நம் அன்பர்களுக்கு இந்த வெற்றித் திரு செய்தியை எடுத்துச் சொல்ல முன்னேடியாக நான் போகிறேன்..."

ஜோசப் பல ஆண்டுகளுக்குப் பின் பழைய மேரியின் களிப்பு கொந்தளிக்கும் நடன ஆட்ட ஓட்டத்தை அன்றுதான் கண்டு, களிப்பால் பரவசமானுன். அந்த செளந்தரிய வடிவத்தின் மலர் உருவம் தூர குன்றுகளுக்கு அப்பால் மறையும் வரை, பார்த்தபடி தன்னை மறந்து நின்ருன்.

ஏசுவைப்பற்றிய இந்தத் திடுக்கிடும் செய்தி காட்டுத் தீ போல ஜெருசலேம் வீதிகளில், ஆலய அதிகாரிகளின் மாளிகைகளில், பிலாத்துவின் ஆஸ்தான மண்டபமெல்லாம் எதிரொலித்து, அவர்களுக்கு மண்டை வலியையும், வயிற்றெரிச்சலையும் கிளப்பி விட்டன.

மக்கள் கூட்டம் வெறிச்சோடிக் கிடந்த கல்லறைத் தோட்டத்தில் குழுமி வியந்து வியந்து மனம் போனவாறு கதையளந்து கொண்டிருந்தது. ஜோசப் கிளியோபாஸுடன் எம்மாவுக்குப் புறப்பட்டான்.

# 15

வழியில் மெலிந்த ஒற்றை நாடி ஆசாமி ஒருவர் கை காலெல்லாம் மறைக்கும் வகையில் நீண்ட உடை அணிந்து அவர்களுடன் சேர்ந்து கொண்டார். அவர் தலைப்பாகைத் துணியும் அவர் முகமண்டலத்தை அடையாளம் தெரியாத வகையில் மறைத்து தொங்கியது.

ஜோசப் சந்தேகத்துடன், "நீ யார்?" என்று கேட்டான்.

"நானும் எம்மாவுக்குப் போகும் வழிப்போக்கன் தான்..."

"ஆமாம், ஜெருசலேமில் நடந்த அற்புதத்தை அறியாத மனிதர் நீங்கள் ஒருவர் தான் போலும். நீர் அது பற்றி வியந்தே பேசவில்லையே?" கிளியோபாஸ் ஆச்சரியத்துடன் கேட்டான்.

"நீங்கள் சொல்வது எனக்கொன்றும் விளங்கவில்லை. அங்கு நடந்த அதிசயமென்ன?" அவர் அலட்சிய பாவத்துடன் கேட்டார்.

"நாசரேத் ஏசு உயிர்த்து விட்டார்......" குதூகலமாக சொன்னான் ஜோசப்.

வழிப்போக்கர் இந்த வார்த்தையைக் கேட்டதும், தன் உடைகளை சரி செய்து தன் முகத்தை மறைத்துக் கொள்ள ஆரம்பித்தார். பார்வையை வேறு பக்கம் திருப்பிக் கொண்டார்.

"கிறிஸ்து இந்தத் துன்ப துயரமெல்லாம் அனுபவித்தது அவசியந்தானா?" இந்த வாதத்தை அவரே ஆரம்பித்தார்.

"அவசியம் என்று தான் நான் கருதுகிறேன். மனுக்குலம் ஈடேறத் தன்னையே பலியாக்கி உலகை உய்விக்க வந்த தெய்வமே அவர். அவரேதான் கிறிஸ்து...!" என்று ஜோசப் உணர்ச்சி ததும்பச் சொன்னான். பிறகு நடந்ததையெல்லாம் அவருக்கு விபரமாக எடுத்துச் சொன்னான்.

வழிப்போக்கரும் ரசனையுடன் அதை மௌனமாகக் கேட்டார்.

எம்மாவிலுள்ள கிளியோப்பாஸ் வீட்டைச் சமீபித்ததும் அந்த வழிப் போக்கரையும் தங்கள் வீட்டில் வந்து விருந்துண்டு சிரமப்பரிகாரம் செய்து போகும்படி கேட்டுக்கொண்டான். ஜோசப்பும் வற்புறுத்தினான். வந்தவரும் கிளியோப்பாஸ் இல்லத்தில் புகுந்தார்.

கிளியோப்பாஸ் அப்பங்களையும், திராட்சை ரசத்தையும் கொண்டு வந்து மேஜையில் எல்லோரும் உண்ண வைத்தான்.

"தயவு கூர்ந்து இந்த அப்பங்களையும் திராட்சை ரசத்தையும் ஆசீர்வதியுங்கள்" என்று கிளியோப்பாஸ் அவரிடம் கேட்டுக்கொண்டான்.

அவரும் அப்பத்தை ஆசீர்வதிக்க தன் வலது கரத்தைத் தூக்கினார். அப்பொழுது அவர் கரத்தை மூடியிருந்த நீலக் கைச்சட்டை விலகியது. ஆணியால் ஏற்பட்ட காயவடு அவர் உள்ளங்கையில் இருப்பதை பார்த்து விட்டான் ஜோசப். அவன் வாயடைத்து பலமுறை அவரை உற்றுப் பார்த்தான். அவரும் அதை கவனித்து விட்டார்.

"சந்தேகமில்லை. அவரேதான்!"

மனதிற்குள் ஆவேசம் குமுற முணுமுணுத்த அவன் எழுந்து மேரியை அழைத்து வர வெளியே ஓடினான். இந்த நேரத்தில் மேலும் திராட்சை ரசத்தை எடுத்துவர உள் அறைக்கு கிளியோப்பாஸ் போனான்.

மேரியுடன் ஜோசப் திரும்பி வருவதற்குள், வந்த வழிப் போக்கர் மாயமாய் மறைந்து விட்டார்.

"மேரி! உயிர்த்த ஏசு சற்று முன் எங்களுடன் இதே விருந்து மேஜை அருகே இருந்தார். நாம் வருவதற்குள் அவர் மறைந்து விட்டார்......"

வீடெல்லாம் ஓடித் தேடினான் ஜோசப்.

"அடடே, நான் திராட்சை ரசத்தை எடுத்து வருவதற்குள் மறைந்து விட்டாரே" என்று கொட்டாவி விட்டான் கிளியோப்பாஸ்.

"கிளியோப்பாஸ்! நம் வழிப் பிரயாணத்தில் நம்முடன் விவாதித்து வந்தவர் வழிப்போக்கரல்ல. இந்த வையகத்தையே வாழ்விக்க வந்த வள்ளல் பிரான்—நம் உயிர்த்த ஏசுதான், அவர்......"

"ஆ! அவரா?" தன் ஏமாந்த தனத்தை நினைத்து வருந்தினான்.

"ஜோசப்! புவனத்திலேயே மகா அதிர்ஷ்டசாலி நீங்கள். அன்பரசர் உங்களுக்குத்தான் தன் முதற் காட்சியை அளித்திருக்கிறார். இந்த உண்மையை உலகுக்கு எடுத்துச் சொல்லும் வைத்தியர் தாங்கள். தன் உயிர்த்த உருவத்தை தங்களுக்கு அவர் காட்டியதில் முழு உண்மை இருக்கிறது. அவர் இறந்ததை அறிந்து சொன்னீர்கள். பிரேதத்தை கல்லறையில் வைத்தபோதும், பிறகு உயிர்த்து போன பின் அந்த பிரேதத்தை சுற்றிய துணிகளில் படிந்திருந்த ரத்தக்கறையையும் கண்குளிரக் கண்டீர்கள். அரசியல் சட்டப்படி மனிதனின் பிரேதத்தைப் பரிசீலித்து இறந்த முடிவை தெளிவிக்கும் தகுதிவாய்ந்தவர்கள், வைத்தியர்கள் தானே? அவர் உயிர்த்து நடமாடுகிறார் என்பதை இன்று நிதர்சனமாக நேரில் தரிசித்து விட்டீர்கள். நாம் இருவருமே சேர்ந்து மரித்த ஏசு உயிர்த்து எழுந்து விட்டார் என்ற சுப செய்தியை உலகுக்கு பறை சாற்றுவோம்......"

மேரி பூத்தமலராகி களிப்பால் கட்டுண்டு நின்றாள். அந்த அழகு வடிவத்தின் முக காந்தத்தில் சொக்கி நின்றான் ஜோசப். அப்போஸ்தலர்களின் கூட்டம் அப்பொழுது அந்த இல்லத்தில் நுழைந்தது.

அப்போஸ்தலர்களைக் கண்டதும் மேரி ஆனந்தத்தால் ஆடிக் குதித்தாள். ஜோசப் எவ்வளவு தடுத்தும் அவள் சிறு குழந்தையைப்போல, "உங்கள் எல்லோருக்கும் தெரியுமா ?" என்று கை கொட்டி பரவசமாகக் கேட்டாள்.

எல்லோரும் ஒன்றும் புரியாமல் விழித்தனர்.

"ஜோசப் ! நீங்களே சொல்லுங்கள். கண்ணால் கண்டு பேசி அவரோடு ஒன்றாக போஜனமமர்ந்தவர், நீர்தானே ? சொல்லும், வையக நாதன் உயிர் பெற்று வந்த அற்புதத்தை ! தன் வாக்குப்படி புத்துயிர் பெற்று யூத மக்களின் மிருக ஆவேச வெறிக்கு சாட்டை கொடுத்து தன்னை நிலை நாட்டிய—புவியை வாழ்விக்க வந்த புவியரசரை வாழ்த்துங்கள்!"

" "என்ன சொல்கிறாய், மேரி. நம் ஏசுவா வந்தார்?" என்று எல்லோரும் வியப்பாகக் கேட்டார்கள்".

நாங்கள் அவரைக் கண் குளிரக் கண்டோம். ஆனால் உடனே அவர் மறைந்து விட்டார்.

எல்லோரது கண்களிலும் ஆனந்தக் கண்ணீர் தாரை தாரையாக வடிந்தது; மெய் சிலிர்த்து பிரமித்து நின்றனர்.

ராயப்பர், "எங்கள் தேவனே!" என்று வாய்விட்டு அலறி முகத்தில் அறைந்து கொண்டார். தேவனின் வாக்குப்படி அவரை மூன்று முறை மறுத்ததன் ஈனச் செயலை நினைத்து அவர் உள்ளம் சித்திரவதைப் பட்டது. பிறகு எல்லோரும் பிரார்த்தனையில் ஆழ்ந்தனர்.

மூன்றும் நாள் கிளியோப்பாஸ் தோட்டத்தில் மேரியுடன் ஜோசப் பேசிக் கொண்டிருக்கும்போது, தோமாஸுடன் ஜீவகா வந்தான். ஜீவகாவை பார்த்ததும், ஜோசப் ஓடிவந்து தான் நேரில் கண்ட அதிசயத்தைச் சொன்னான். ஜீவகா ஒன்றும் புரியாமல் விழித்தான். மேரி தோமாஸிடம் சொன்ன போது, அவர் முகத்தில் சந்தேக இருள் தான் விலகாமல் படிந்து கிடந்தது. வேகமாக அவர் அப்போஸ்தலர்களை நோக்கி நடந்தார். மற்றவர்களும் அவரைப் பின் தொடர்ந்தார்கள்.

தோமாஸைப் பார்த்ததும் ராயப்பர் ஓடிவந்து, உயிர்த்த ஆண்டவரை தாங்கள் எல்லோரும் நேரில் பார்த்ததாகச் சொன்னார். மற்றவர்களும் சுவாமியைக் கண்டோமென்றார்கள். அப்பொழுதும் அவர் சந்தேகத் திரை விலக வில்லை.

“நான் அவருடைய கரங்களிலே ஆணிகள் அறைந்த துவாரத்தைக் கண்டு, ஆணிகள் இருந்த இடங்களிலே என் விரலையும் விட்டு, அவருடைய விலாவில் என் கையையும் இட்டா லொழிய நான் விசுவசிக்க மாட்டேன்”

“ஜீவகா ஜோசப்பைக் கிள்ளி, இவர்தான் சந்தேகத் தோமாஸ் என்று பெயரெடுத்த செம்மலாச்சே, நேரில் பார்க்காதவரை இவரை யாராலும் நம்ப வைக்க முடியாதப்பா” என்றான்.

“கடைசி இராப்போசனத்தின் போதே, சந்தேகத்துடன் நம் ஏசுவை வினவிய வெகுளியாச்சே! இந்த சந்தேகச் சிகரமா நாம் சொன்னால் கேட்க்கப்போகுது?” என்று அப்போஸ்தலர்களின் கூட்டத்திலிருந்து ஓர் குரல் எழுந்தது.

எட்டாம் நாள் மறுபடியும் அப்போஸ்தலர்கள் வீட்டுக்குள் தோமையாருடன் இருந்தனர். அப்பொழுது ஏசுநாதர் வந்து, “உங்களுக்கு சமாதானம் உண்டாவதாக” என்றார்.

“கதவுகள் பூட்டியிருக்கின்றன.எப்படிவந்தார் ?” என்று சுற்றிலும் பார்த்தபடி மிரள மிரள விழித்த மேரி கேட்டாள்.

வந்தவர் தோமையாரை அருகே அழைத்தார்.

தோமையாரும் நடுங்கியபடி அருகே போனார்.

“இங்கே உன் விரலை இடு. என் கரங்களைப் பார். உன்கையை நீட்டி என் விலாவிலே வை. அவிசுவாசியாய் இராமல், விசுவாசியாய் இரு”

“என் ஆண்டவரே, என் தேவனே” என்று கதறிக் கண் மூடி தன்னையே நொந்து நின்றார் தோமாஸ்.

“தோமாஸ்! நீ என்னைக் கண்டதினால் அல்லவா, விசுவசித்தாய் ? காணாதிருந்தும், விசுவசித்தவர்கள் தான் பாக்கியவான்கள்”

ஏசுவின் அந்த சொல்லடி எல்லோரையும் தலை கவிழ வைத்தது. நடுங்கிப்போன ஜோசப் மேரியைப் பார்த்தான்.

அண்ணலின் தியாக அக்னி வீசும் அருள் வடிவத்தைப் பார்த்து மெய் மறந்து நின்ருள் மேரி.

ஏசு மறைந்ததும் ஜோசப் ஜீவகாவுடன் கோதுமை பயிர் வெளியை அடுத்த அத்தி மரத்தருகே அமர்ந்து முதிர்ந்த கதிர்களின் கவர்ச்சியை ரசிக்க ஆரம்பித்தான்.

ஜீவகா ஜோசப்பை உலுக்கி, "நானும் ஏசுவின் மெய் மறையை ஏற்று ஞானஸ்நானம் பெற முடிவு செய்துவிட்டேன். ஆமாம், உன் திருமண விஷயம் எப்பொழுது ஒரு முடிவில் வந்து நிற்கப்போகிறது?" என்று கேட்டான்.

"திருமணம்" என்று ஜோசப் வார்த்தையை எடுப்பதற்குள், மேரி அவனைத் தேடி வந்து விடடாள்.

"வைத்தியரும், வைத்தியரும் கோதுமைப் பயிர் வெளியில் அமர்ந்து எந்தக் கோட்டையைப் பிடிக்கலாம் என்ற யோசனையில் இருக்கிறீர்கள் ? "

"ஜீவகா ஞானஸ்நானம் பெறப் போகிருராம். நம் திருமண விஷ்யம் பற்றியும் கேட்டார். நான்......"

ஜோசப் வார்த்தையை முடிப்பதற்குள் மேரி அவனை ஒருவிதமாகப் பார்த்ததும், வாய்மூடி மௌனியாகி விட்டான்.

ஆண்டவர் பரலோகத்திற்கு எழுந்தருளியாவதற்குமுன், பதினெருவரும் பந்தியிலிருக்கையில், அவர்களுக்கு கடைசியாக தரிசனமாகி, "நீங்கள் உலகமெங்கும் போய், எல்லா சிருஷ்டிகளுக்கும் சுவிசேஷத்தை பிரசங்கியுங்கள்" என்று அறிவுரை கூறினர்.

எல்லோரும் தலைவணங்கி பணிவுடன், 'இட்ட கட்டளையை இடரில்லாமல் செய்து முடிப்போம்' என்று உறுதி கூறுபவர்கள் போல் மௌனமாக இருந்தனர்.

# 16

அப்போஸ்தலர்கள் ஜெருசலேமுக்குப் போனதும், மேரியும் ஜோசப்பும் கிளியோப்பாஸ் வீட்டில் தங்கி, தங்கள் எதிர் காலத்தைப்பற்றி விவாதித்துக் கொண்டிருந்தனர். அப்பொழுது வேர்த்து விறுவிறுக்க ஓடிவந்தான் ஜீவகா!

"ஜோசப்! நெஞ்சை பிடித்து உலுக்கும் அற்புதத்தை நான் நேரில் கண்டு பிரமித்து ஓடிவந்தேன். இப்பொழுது அப்போஸ்தர்கள் என் நாட்டு பாஷையிலும் பேசக் கேட்டு இன்ப உணர்ச்சியால் என்னை மறந்து ஆடிக்குதித்தேன். பல ஆண்டுகளுக்குப்பின் என் தாய் மொழியை இந்த மண்ணில் பிறந்த அப்போஸ்தலர்கள் சுவை பொங்க பேசியது, நான் பிறந்த பேற்றை இன்றே பெற்றவன்போல் ஆனேன், ஜோசப்" என்றான் ஜீவகா.

"இஸ்பிரித்து சாந்துவானவர் அவர்கள் மீது இறங்கியதும் இந்த புதுமை பொங்கும் சொல்லாற்றலும், புத்துணர்ச்சியும் அவர்களுக்கு பிறந்து விட்டது" என்றாள் மேரி.

"உன்னுடைய வைத்தியத் தொழிற் பயிற்சி யெல்லாம் தான் முடிந்து விட்டது. இனி நீ"

"அப்போ நான் இங்கு இருக்கக் கூடாது என்பது உன் அபிப்பிராயம். அப்படித்தானே ?"

"நீ எங்கே என்னை விட்டுப் பிரிந்து உன் சொந்த நாட்டிற்குப் போய் விடுவாயோ என்ற கவலைதான் சதா எனக்கு. சகோதரர்க

ளாகப் பழகி விட்டோம். என்றுமே நிரந்தரமாகப் பார்க்க முடியாமல் நாம் பிரிவதென்ருல்......?"

"பிறந்த மண்ணை மறந்த மடையன் எவனுவது இருக்க முடியுமா, ஜோசப்? தன் தாய் நாட்டு மக்கள் சூபீட்சமாக வாழ வைத்தியக் கலையை தூர நாடு சென்ருவது, பல துன்பங்களையும் சகித்து ஏற்று படித்து விருது பெற்று திரும்பவேண்டும் என்ற முடிவுடன் கடலில் காலை வைத்தவனை, நீ தடுக்கிருய்? நட்பு உன்னை தடுமாறச் செய்கிறது? ஆனல் கடமை என்னை அறைகூவி அழைத்த வண்ண மாக இருக்கிறது"

"என் வாழ்வில் மேரியும் இல்லை. நீயும் என்னை விட்டே போகப் போகிருய் ? "

"வைத்தியனுக்கு நெஞ்சுரம் மிக மிக முக்கியம். நீ என்ன டான்ன, கோழையாக கண் கலங்குகிருய்? சேவை வேகத்தில் நம் உலகம்—உத்யான வன மெல்லாமே பிறர் நம்மால் அடையும் நன் மையால் நாம் காணும் இன்பம் தானே ? ஜோசப்! ஒன்று சொல்ல மறந்தேவிட்டேன்."

"என்ன அது ஜீவகா ?"

"தோமாஸ் கையால் நான் ஞானஸ்நானம் பெற்ற பின்பே, கப் பற் பிரயாணத்தை மேற்கொள்ளப்போகிறேன்"

"அப்படியா?"

"உம் நாடு நலமுடன் வாழும்". மேரி பரவசமாகச் சென்னுள்.

"நாடு நலமுற ஏசுவின் அன்புரைகளைத் தூவ தோமாஸ் எங்க நாட்டுக்கு வந்தால் ?"

"அவர் வர தரை மார்க்கமோ, கடல் மார்க்கமோ சாதகமாக இருக்க வேண்டுமே?" என்று ஜோசப் கேட்டான்.

"உங்கள் நாடு வளமான நாடா ?" என்று வியப்புடன் வினு வினுள் மேரி.

தன் நாட்டைப் பற்றிக் கேட்டதும், அவன் நெஞ்சிலே தன் நாட்டுணர்ச்சி பொங்கி எழுந்தது.

"உலகமெலாம் கை கோர்த்து இணைந்து வாழ துடிதுடித்து, மரக்கல மேரி ஆழியைக் கடந்து வாணிபம் செய்த திருநாடு எங்கள் நாடு. அன்னியர் கண்களைக் கவர்ந்து படையெடுத்து நாட்டையே வசமாக்கிக் கொள்ளும் அளவுக்கு பொன்னும், மணியும் பசுமையான வளமும் கொஞ்சி நாகரீகம் முதிர்ந்த நாடு, எங்கள் இந்திய மண். பட்டு, பருத்தி, மஸ்லீன், பவளம், முத்து, மிளகு, ஆகிய எங்கள் விளைபொருள்கள் ரோம சக்கரவர்த்தினிகளை ஏங்கவைத்து வேடிக்கை பார்த்த செல்வம் கொழித்த நாடு. தெய்வ பக்தியும், ஆத்ம பலமும், அறிவொழுக்கமும் ஒருங்கே மணம் வீசும் மங்காத் தங்க பூமி எம் பாரத நாடு."

இவ்வளவு நேரமும் மேரியைப் பார்த்து, நாட்டுணர்ச்சியுடன் பேசிய ஜீவகா திரும்பி ஜோசப்பைப் பார்த்துப் பேசினன்.

"சாலமோன் சக்கரவர்த்தி அவையில் இந்திய சாமான்கள் அலங்கரிக்கும் வகையில், வாணிபம் வளர்ந்தோங்கி எங்கள் கடல் மார்க்க பிரயாண அனுபவமும் முதிரவில்லையா? சந்திர குப்த மௌரியர் காலத்தில், கிரேக்க யாத்ரீகர் மெகாஸ்தினஸ் இந்திய பாடலிபுத்ரம் வரை கால் நடையாக வரவில்லையா?"

"கிரேக்க மா மன்னன் அலெக்ஸாண்டர் தரைமார்க்கமாகத் தானே, படையெடுத்து இந்திய மண்ணில் தன் மங்காத வீரத்தைப் பதித்துப் போனன்? எல்லோருக்கும் எங்கள் நாடு வர கடல் மார்க்கமும், தரை மார்க்கவும் தண்ணிபட்ட பாடாக தெரிந்திருக்கிறதே? அப்படியிருக்க தோமஸ் ஏன் எங்கள் நாட்டிற்கு வரக்கூடாது? நான் வைத்தியம் பயில வரவில்லையா?"

"பாருங்களேன். உங்கள் ஆசையும் வீண்போகாது. அவர் உங்கள் தாய் நாட்டுக்கே சொந்தமான அப்போஸ்தலராக மரிப்பார்" என்ருள் பரவசமாக மேரி.

"நான் என் நாடு போனதும், இவரை ஒவ்வொரு நாளும் எதிர் பார்த்த வண்ணமாகவே இருப்பேன்"

"உன் விசுவாசம் என் நெஞ்சில் இனிமையைத் தூவும்"

அப்போஸ்தலர்களுடைய ஆசி பெற்றபின் ஜீவகா புறப்பட்டான். அவனை வழியனுப்ப கரையில் கண் கலங்கி ஜோசப்பும், மேரியும் நின்றனர்!

ஜோசப் ஜீவகாவை அணைத்து தேம்பித் தேம்பி அழுதான்.

"சகோதரா! இப்படி நாம் பிரியத்தானா பழகினோம்?"

"கலங்காதே, ஜோசப். பல கண்டங்களை ஒன்று சேர்க்கும் இந்த நீலக்கடல், நம் நினைவை என்றும் அழியாமல் நினைவுறுத்தும். வைத்தியன் நாம் என்பதை அறிந்து தன்னலமற்ற பரித்தியாக வாழ்வை நாம் மேற்கொள்வோம். மேரி! என் அருமைச் சகோதரி! நம் ஏசுவின் அன்புத் தீபம் உலகெலாம் பிரகாசிக்க பாடுபடுவோம். நீங்கள் **பெற்ற மகிமையை** என் தாய் நாட்டு மக்களுக்கு எடுத்து நான் விளக்குவேன்" என்று கூறி விடைபெற்று மரக்கலத்தில் ஏறிக் கொண்டான் ஜீவகா.

"அண்ணா!" அதற்கு மேல் மேரியால் பேச முடியவில்லை.

"ஜீவகா" என்று ஆவேசமாக கலம்நோக்கி ஓடினான் ஜோசப்.

பாய் விரித்த கலமும் ஆடி அசைந்து ஆழி மீது நகர ஆரம்பித்தது. மேரி ஓடி ஜோசப்பை தடுத்து நிறுத்தினாள்.

ஜீவகாவின் வணங்கிய கை தூர மறையும் வரை, கீழே இறங்க வில்லை.

அந்த இந்திய நல்ல மகனை பிரிந்த துயரம் தாங்காமல் துடித்து அப்படியே சிலையாக நின்றனர் மேரியும், ஜோசப்பும்!

# அலிஜா

## 1

"அலிஜா...!"

"அயினுஸ்...!"

"நீயா? கோல கலாபச் சாயலும், கன்னற் சுவையேறிய விழி வட்டமும், நீலக் கடலின் முத்துப் பற்களும், நெஞ்சை அள்ளும் யாழ் குரலும், மலையருவியின் சிரிப்பொலியும் எங்கு ஓடி ஒளிந்து உன்னை வஞ்சித்துவிட்டது, அலிஜா? உன் காவிய மேனி இனி விகாரமாய் சிதைந்து உதிரும் மலரிதழைப்போல உதிர்ந்திட வேண்டியது தானா?"

"..................."

"கண்ணைப் பறிக்கும் கருப்புச் சலவைக்கல் மாளிகையில் கற்பகப் பேடகமாய் கனிவுடன் வாழ்ந்த நீ, இன்று கற்குகையில் கண்ணீரும் கம்பலையுமாய் அபலையாக சஞ்சலப்படுகிறாயே? என் இதயப் புரு இப்படி சீரழிவதைக் காண என் இதயமே இரு கூறாக பிளந்து துடிக்கிறதே, அலிஜா!"

அவள் பதில் பேசாது குனிந்து நின்றாள். அவள் இதயமே பொங்கும் கடலாக குமுறி கண்ணீராக அவள் கண்களில் வழிந் தொழுகி அக்கற்பூமியை நனைத்தது. ஹின்னோன் பள்ளத்தாக்கு

முழுவதும் அயினுஸின் கதறலொலியும், அலிஜாவின் விசும்ப லொலியும் பட்டு எதிரொலித்தன.

அயினுஸால் தன் மனதைக் கட்டுப் படுத்த முடியவில்லை. தன் காதல் ஜீவனைத் தழுவ தாவியும் விட்டான். அலிஜா பதறி அப்பால் நகர்ந்து தவித்தாள். அயினுஸின் நெஞ்சில் தன் முகத்தைப் புதைத்து ஆத்திரம் தீர அழவேண்டுமென்றுதான் துடியாய் துடித்தது அவள் தவித்த உள்ளமும். ஆனால்...?

"அயினுஸ்..."

நீர் கோர்த்த விழிகளுடன் நிமிர்ந்த அயினுஸின் உதடுகள் துடித்தன. நீண்டு அகன்று நிமிர்ந்த அவன் புஜங்களும் ஆடிப் பதறின.

இதயத்தைப் பிய்த்தெறியும் அந்த துடிதுடித்த நேரத்திலும் அவள் கண்ணீர் வதனத்தில் புன்னகை மலர்ந்தது.

"அயினுஸ்! கண்டாலே குடலை பிய்க்கும், தொட்டாலே உடலை நசநசக்கும் அழுகுணி குஷ்டநோயையும் கருதாது தாவித் தழுவ நம் அன்பு வென்றுவிட்டது. ஆனால் யூத சட்டம் நம்மை தடுத்து நிறுத்தி, நம் அன்பிற்கு வேலிபோட்டுவிட்டது. சரீரத்தால் நாம் பிரிக் கப்பட்டுவிட்டோம். சட்டப்படி குஷ்டரோகிகள் ஊருக்கு வெளியே வசிக்கவேண்டுமாம். யாரும் அணுக மாட்டார்களாம். அப்படி யாரா வது சமீபத்தில் வருவது தெரிந்தால் குஷ்டரோகிகள் தலைப்பாகை யை நீக்கிவிட்டு கையை வாய்க்கு முன் வைத்துக்கொண்டு 'அசுத் தம்' என்று கத்த வேண்டுமாம்"

"அலிஜா..."!

"ஆம், இந்த இடத்தைவிட்டு போய்விடுங்கள். என்னை இனி மறந்தே விடுங்கள்".

அவன் குரல் கரகரத்தது. அவள் அழாது அழுதாள்.

அயினுஸின் மார்பு, பொங்கும் அலைபோல நிமிர்ந்து தாழ்ந்தது. அலிஜாவின் கழுத்தோரத்திலுள்ள சிறு வட்டவடிவமான புண்ணி லிருந்து ரத்தம் கசிவதை அயினுஸ் பார்த்துவிட்டான். உடனே தன் கழுத்தைச் சுற்றியிருந்த நீண்ட பழந் துணியை அவிழ்த்து அந்த ரத் தக் கசிவைத் துடைக்க அலிஜாவின் முன்பு போட்டான்.

தன் நினைவுப் பொருளாகத்தான் அந்த பழந்துணியை அயி னுஸ் தனக்கு கொடுக்கிருன் என்று நினைத்து மகிழ்ச்சியுடன் அதை எடுத்து தன் கண்களில் ஒத்திக்கொண்டாள் அலிஜா.

அயினுஸ் ஒன்றுமே பேசாது சிறிதுநேரம் மௌனமாகவே இருந்தான். திடீரென்று அவன் குதிரைக் கனைப்புச் சப்தம் கேட்ட தும், ஏதோ யோசனை பெற்றவன்போல நிமிர்ந்து, "அலிஜா, நான் வருகிறேன்" என்று கூறிவிட்டு அவளைத் திரும்பிப் பாராது மனதை பலவந்தமாக கட்டுப்படுத்தி, குதிரைமீது ஏறி அமர்ந்து குதிரையை தட்டிவிட்டான்.

"அயினுஸ்" என்று அலற அவள் உள்ளம் தாவித் தவித்தது. ஆனால் வார்த்தைகள் வெளிவரவில்லை.

தங்கக் கிரணங்களை வாரி இறைத்து மலைவாயிலில் குதித்துக் கொண்டிருக்கும் மாலைக் கதிரவன் ஒளியில் அயினுஸின் உருவம் தூர மறைவதைப் பார்த்துக்கொண்டே நின்ருள் அழுதபடி அலிஜா.

மாளிகைப் பேரழகி அலிஜா, ஹின்னேன் பள்ளத்தாக்கின் குகையொன்றில் மனித சமூகம் விரட்டியடிக்கும் தொழுநோய் பிண்டமாகக் கிடந்தாள். கண்ணைப்பறிக்கும் அவள் வாழ்ந்த பட்ட ணத்தின் எழிலும், சலவைக் கற்களால் கட்டப்பட்ட கோபுரங்களும், தங்கத் தகடுகளால் வேய்ந்த கோபுர மகுடங்களும், காலையிலும் மாலையிலும் பரிதியின் பொற்பூச்சால் ஜெகஜோதியாய் மின்னு வதைப் பார்த்து கண்ணீர் உகுத்து பூத்துப்போய்க் கொண்டேயிருந் தன அலிஜாவின் பளிங்கு விழிகள்! இளமை துடிக்கும் பருவத்தில் பாசிப்பிடித்த பிணமாகத்தான் பூதகுலத்தால் கற்குகையொன்றில்

வாழ விரட்டப்பட்டாள். அவள் அழகுதான் அழுகிக்கொண்டிருந்தது. ஆனால், அவள் இள உள்ளம் அழியாமல் அழுகாமல் அயினுஸை நினைத்துப் பூரித்துக்கொண்டிருந்தது.

"படநாகம் தோலுரித்த பான்மையின் கல்லூடுரிஞ்சித்
தடநாகம் தூங்கருவி தாவழகார் நாடிதுவே" என்று

வீரமாமுனிவர் தேம்பாவணியில் யூதேயா நாட்டு மலைச்சாரலை வர்ணித்த அருவிகள் குமுறி கொப்பளித்தோடும் மலைச்சாரலைப் பார்த்துப் பார்த்து அலிஜாவின் விழிகளும் துயர அருவிகளாக கண்ணீரைக் கொப்பளித்தன.

2

"அலிஜாவை உங்களுக்குத் தெரியுமோ?"

ஆ, அவளை அறியாத கன்னிகூட யூத குலத்தில் இருக்க முடியுமா? அவள் பேரழகி; கீத குயில்; அறிவின் தீபம்!"

"அயினுஸைத் தெரியுமோ?"

"அயினுஸா? ரோம் சக்ரவர்த்தியின் பேரவையில் விருது பல பெற்ற வீரபரம்பரையில் உதித்த வீரனை அறியாத ஆண்கள் கூட உண்டோ? ஆண்மையும், அறிவும் அன்பும் ஒருங்கே உருக்கொண்ட புஜபல பராக்கிரம வீரனல்லவா, அவன்!"

பரிசேயரின் வம்சத்தைச் சேர்ந்தவள் அலிஜா!

சதுசேயரின் வம்சத்தைச் சேர்ந்தவன் அயினுஸ்!

பிற மதாசார கலப்பை எதிர்த்து மக்கபேயர் காலத்தில் ஏற்பட்ட கிளர்ச்சியில் விளைந்த மூன்று கட்சிகளில் முதல் இரு கட்சியைச் சேர்ந்தவர்கள் பரிசேயரும், சதுசேயரும்! இரு பிரிவினரும் நேர்மாறான கருத்துள்ளவர்கள். இணைய முடியாத இரு துருவங்கள்!

பரிசேயர் வைதீகப் பித்தும், அகங்காரமும், பிறரை இகழ்வதில் இன்பமும் பெரிய ஞானிகளைப்போல பகட்டடித்துக் கொள்ளும்

குணமும் உள்ளவர்கள். வேதாகம சட்டங்களை அச்சரம் பிசகாமல் அனுசரிப்பது அவர்களின் நோக்கம்.

சதுசேயர் யூதர்களில் மிகுந்த பணமும், அதிகாரமும் கொண்டவர்கள். அரசாங்க பீடங்களில் நல்ல பதவிகளை வகிப்பவர்கள். நுணு நுணுக்கமாக வேதானுசாரங்களைக் கற்றுத் தேர்ந்தவர்கள். ஆசாரங்களில் நம்பிக்கை வைக்காது, சன்மார்க்க நடத்தையே சகலத்திலும் சிறந்தது என்ற கொள்கையுடையவர்கள்.

அலிஜாவுக்கும், அயினுஸுக்கும் எதிர்பாரா வகையில் அந்த முதல் சந்திப்பு ஏற்பட்டது.

கதிரவன் தங்கக் கிரணங்களை வாரி இறைக்கும் ஓர் மாலை நேரம். மலர் மணத்தை ஏந்தி வந்து அங்கு வெஞ்சாமரை வீசிக் கொண்டிருந்தது தென்றல். கிணற்றடியில் அமர்ந்து ஏதோ ஓர் பாட்டை அழகாகப் பாடிக்கொண்டிருந்தாள் அலிஜா.

குதிரை மீதமர்ந்து அந்தப் பூங்காவை கடந்து கொண்டிருந்த அயினுஸின் செவியில் அலிஜாவின் இன்ப கீதம் தேன் பாய்ச்சியது. மகுடி இசையில் கட்டுண்ட நாகம் போல அலிஜாவின் கீத கானத்தில் மயங்கிய அயினுஸ், குதிரையை நிறுத்தி இறங்கி, கானம் வந்த திசையை நோக்கி வந்தான். அழகி அலிஜாவின் மோகன உருவம் அவனை வசீகரித்தது. அரவம் கேட்டு திரும்பிய அலிஜாவும் அயினுஸின் அழகில் மயங்கி எழுந்து ஓடாது அசையாது நின்றுள்.

முதல் சந்திப்பிலேயே ஒருவரையொருவர் நன்கு அறிமுகப் படுத்திக்கொண்டனர். அவர்களின் மறு சந்திப்புகள் ஓரிரு முறை தான் நேர்ந்தன. சமூகப் பிளவுகள் அவர்கள் மண வாழ்வுக்கு இடம் கொடுக்கவில்லையாயினும், ‘மணந்தால் இருவர். இல்லையேல் மரண மட்டும் மணமில்லாமலே வாழ்வோம்’ என்ற சபதம் எடுத்துக் கொண்டனர் தங்களுக்குள்.

அலிஜா கிறிஸ்துவைப் பற்றி கேள்விப்பட்டிருந்தாளே யன்றி, அவரை நேரில் பார்த்தது கிடையாது. அவள் தந்தை சக்கேயு

ஆஸ்திக்காரனுயிருந்தாலும், எல்லோரிடத்திலும் அன்பாகப் பழகக் கூடியவன். அவனைப்பற்றி விபரமறிந்த கிறிஸ்துவும், பலர் பயமுறுத் தலுக்கு செவி சாய்க்காது அவன் வீட்டிற்கு வந்தார்.

“இன்றைக்கு இந்த வீட்டுக்கு இரட்சணிய முண்டாயிற்று. ஏனெனில் இவனும் அபிரகாமுக்கு புத்ரனுயிருக்கிருன்” என்று கூறி சக்கேயுவின் வீட்டிலேயே விருந்தருந்தி அவன் மனதைக் கவர்ந்தார். அந்த வேளையில்தான் கிறிஸ்துபிரான், “ஆஸ்திக் காரன் தேவனின் ராஜ்யத்தில் பிரவேசிப்பதைவிட, ஊசியின் துவாரத்து வழியாய் ஒட்டகம் நுழைந்து போவது வெகு எளிது” என்று கூறி ஆஸ்திக்காரர்களுக்குச் சூடு கொடுத்தார்.

பல நாள் கேள்விப்பட்டு ஏங்கியிருந்த அலிஜா தன் வீட்டிலேயே கிறிஸ்துபிரான் விருந்தருந்தியதை தரிசிக்கவும், அவர் பொன் மொழிகளைக் கேட்கவும், பாக்யம் கிடைத்ததே என்று பரவசப் பூரிப் படைந்தாள்.

இடையில் அநேக மாதங்கள் ஓடின. அலிஜாவும் அயினுஸும் சந்திக்கவே இல்லை.

யூதர்களால் அடிபட்டு சிலுவையில் கிறிஸ்துபிரான் அறை யப்படும் அசுபச் செய்தி கேட்ட அலிஜா துக்கப்பட்டு அழுதாள். தன் அயினுஸ் அருகிலிருந்தாலாவது அவனை மன்ருடி கொடியவர் களைக் கொன்று குவித்து மீட்பரை மீட்கலாமே; அயினுஸையும் இந்த துயர நேரத்தில் சந்திக்க முடியவில்லையே என்று தனிமையில் தன் வீட்டு மேல் தளத்தில் நின்று, ஆகாயத்தையும், நகரத்தையும், ஓடியாடித் திரியும் மக்களையும் பார்த்து கண்ணீர் விட்டுப் புலம்பினுள் அலிஜா.

ஆனுல், அயினுஸோ அதே நேரத்தில் மேலதிகாரிகளின் உத்தி ரவுப்படி கிறிஸ்துபிரானை உபத்திரவப் படுத்தும் வீரர்களில் ஒருவ ணுக கவச மணிந்து இடையில் வாளும், ஒரு கரத்தில் ஈட்டியும், மறு கரத்தில் சாட்டையுமாக சக வீரர்களுடன் சிலுவை சுமக்கும் கிறிஸ்

துவுடன் கல்வாரி மலைக்குப் போய்க்கொண்டிருந்தான். அயினுஸ் கிறிஸ்துவின் போதனைகளையும், அவர் செய்த புதுமைகளையும் நேரில் கண்டு கேட்டறிந்து அவர் மீது ஓர் அபிமானம் கொண்டு தான் இருந்தான். இருந்தாலும் அவன் அரசாங்க சேவகன். மேலிடத்து சட்டத்திற்கு தலைவணங்க வேண்டிய பிராணி தானே!

சோகத்தால் சிறிது நாள் அலிஜா அயினுஸை மறந்து கூட விட்டான். அயினுஸும் அரசாங்க அலுவலின் காரணமாக திபேரியாக் கடலின் வட கிழக்கிலுள்ள பெத்சாயிதா நகருக்கு அனுப்பப் பட்டான்.

ஓர் ஆண்டு ஓடி மறைந்தது.

திடீரென்று திடுக்கிடும் வகையில் அழகி அலிஜாவின் முகமெல்லாம், உடலெல்லாம் குஷ்ட நோயின் தடங்கள் பூத்து வளர்ந்தன. அவள் அழகு மேனி அவலட்சணமாக சிதைய ஆரம்பித்தது. அவள் தந்தை சக்கேயு தன் ஒரே மகளின் நிலையைக் காணச் சகியாது வருந்தி அழுதான். அவனது எதிர்காலக் கனவுகள் நொருங்கிப் போனதே என்று மனம் இடிந்துப் போனான். யூத சட்டத்திற்கு பயந்து, ஊருக்கு கோடியிலுள்ள ஜன சந்தடியற்ற ஹின்னோன் பள்ளத்தாக்கின் குகையொன்றில் அலிஜாவை கொண்டுபோய் விட்டு சாப்பிட வசதி யாவும் செய்து கொடுத்தான்.

அலிஜாவின் உடலைப்போல உள்ளமும் புண்பட்டுத் துடித்தது 'இனி என் நேசன் அயினுஸை ஆயுசு பூராவும் அடையமுடியாதே? என் நிலை கண்டு என் அன்பரின் மனம் எவ்விதம் ஏங்கி மடியுமோ' என்று இரவு பகல் புலம்பியபடி கற்குகையில் கிடந்தாள் அலிஜா.

போன அலுவல் முடிந்து திரும்பிய அயினுஸ், தன் காதலியைக் கண்டு களித்து பிரிவின் துயரை பகிர்ந்து கொள்ளவேண்டும். எப்படியும் இந்த ஆண்டு திருமணமும் முடித்தாகவேண்டும் என்ற ஆர்வத்துடன் ஓடோடியும் வந்தான். ஆனால் அவன் தன் சொந்த ஊரில் கால் வைத்த உடனே அலிஜாவைப் பற்றி கேள்விப்பட்டதும் பதறிப் பதைத்துப் போனான். எல்லாமே அவ

னுக்கு கனவாகப்பட்டது. எதையுமே நம்பாமல் பைத்தியம் பிடித்தவன் போல தெருவெல்லாம் ஓடி, இறுதியில் ஹின்னேன் பள்ளத் தாக்கிற்கு வந்தான்.

அன்பன் அயினுஸின் அலறலைக் கேட்ட அலிஜா துடித்து எழுந்து குகையை விட்டு, "அயினுஸ்" என்று அலறி ஓடி வந்தாள். இளங்காதலர்களின் கதறலொலி அக் கற்பூமி முழுவதுமே மோதி எதிரொலித்தது.

3

மனம் உடைந்த அயினுஸ் தன் தோட்டத்தின் மூலையில் ஒரு நாள் மாலை அமர்ந்து, "ஆசை அழிந்தபின் வாழ்வதில் பயனில்லை. அலிஜாவின் உடல் அங்கு அழுகுகிறது. இங்கு அயினுஸின் உள்ளம் புழுங்கி சூம்புகிறது. இனி சித்திரவதையுடன் வாழ்வதைவிட இறப்பதே மேல்" என்று புலம்பியபடி சாகவும் துணிந்துவிட்டான்.

அப்பொழுது அவன் ஜீவனின் கீத குரல் பின்புரம் காற்றிலே மிதந்து வந்தது. திடுக்கிட்டுத் திரும்பினன். பாடியபடி அலிஜாவின் பொன்னுருவம் தூரத்திலிருந்து அவனை நோக்கி வந்து கொண்டிருந்தது. அவன் தன் கண்களையே நம்ப முடியவில்லை. பலமுறை கண்களை கசக்கிப் பார்த்தான். அவளேதான்—ஆசை அலிஜா!

"அலிஜா" என்று அழுதபடி அவள் அருகே ஓடினன்.

அவளும், "அயினுஸ்" என்று பரவசத்துடன் அழைத்தபடி ஓடிவந்தாள்.

"ஆ". ஆச்சரியத்துடன் குத்திட்டு நின்றன அவன் விழிகள். அலிஜா பொற் தகடு போல அன்று போலவே அழகு மிளிர்ந்து நின்ருள். நோய்த் தடங்கள் ஒன்றுகூட அவள் மேனியில் குறிகாட்டவில்லை. உணர்ச்சியுடன் அவளை வாரி அணைத்துக் கொண்டான்.

அவளும் சிறு குழந்தையைப் போல அவன் நெஞ்சில் தன் முகத்தைப் புதைத்து நெடு நேரம் அழுதாள்.

காதலர்களின் கண்களில் தெறித்த துயரக் கண்ணீர்த் துளிகள் சிதறியோடி, ஆனந்தப் பரவசக் கண்ணீர்த் துளிகளாக திரண்டு துளிர்த்தன.

அலிஜாவின் உடல் குணம் பெற்ற விபரம் புரியாமல் எல்லோருமே திகைத்தனர். அலிஜாவைக் கேட்டனர். அவளும் ஆச்சரியப் படுவதாகச் சொன்னாள். அயினஸையும் கேட்டனர். அவனும் உதட்டைப் பிதுக்கி, ''புதிதாக இருக்கிறது. எதுபோனாலும் என் அலிஜா இன்று செத்து மீண்டுவிட்டாள். அதுவே போதும்'' என்று பூரிப்புடன் பதிலளித்தான்.

எல்லோரது ஆழ்ந்த ஆராய்ச்சிக்குப்பின், அயினஸ் தன் கழுத்தைச் சுற்றியிருந்த துணியை எடுத்து அலிஜாவிடம் விட்டெறிந்ததும், அவள் அதை எடுத்து தன் கழுத்தில் சுற்றிக்கொண்டதையும் கேட்டறிந்ததைக் கொண்டு, அந்த துண்டுத் துணியில் தான் ஏதோ ஓர் மகத்துவம் இருக்கிறது என்ற முடிவுக்கு வந்தனர்.

''கபால ஸ்தலத்தில் கிறிஸ்துவை சிலுவையில் அறைந்தபோது, அவரது வஸ்திரங்களை நாங்கள் பங்கு போட்டுக் கொண்டோம். அதில் எனக்கு கிடைத்த துண்டுத் துணியே இது'' என்றான் அயினஸ். பிறகுதான் எல்லோரது அறிவுக் கண்களும் திறந்தன. நிகழ்ந்த புதுமையை திக்கெட்டும் பறை சாத்தினர். அந்தத் துணியுடன் மற்ற பகுதிகளையும் சேர்த்து பூஜிதமாக காப்பாற்ற எல்லோரும் முடிவு செய்தனர்.

தங்களை அற்புதமாகப் புதுமை மூலம் கூட்டி வைத்த கிறிஸ்துவிற்கு தங்கள் நன்றியை செலுத்தியதோடு மட்டுமல்லாமல், அப்போஸ்தலர்களின் போதனைப்படி ஞானஸ்நானம் பெற்று, கிறிஸ்துவர்களாக மாறினர் தம்பதிகளான அலிஜாவும், அயினஸும்!

# தர்காஸ்

# தர்காஸ்

முது வேனில் பருவம். மத்திய தரைக் கடலினின்று எழுந்த வெப்ப வாடைதான் ஜாப்பா நகர் முழுவதும் வீசி வளைந்து ஓடியது. சுற்றுப்புறத்திலுள்ள மக்களெல்லாம் வந்து கூடி நகரே, 'ஜே ஜே' என்றுதான் கண்கொள்ளாக் காவியக் காட்சியாக விளங்கியது. சிறுவர்களெல்லாம் மகிழ்ச்சியால் துள்ளிக் குதித்து தின்பண்டங்களை வாங்கி ருசித்து ஆடிப் பாடினர். வியாபாரிகளும், நகர மக்களும் வியாபாரப் பொருள்களை பேரம் பேசி, வாங்கிப் போவதில் விறு விறுப்புடன் இருந்தனர்.

சிறுவன் பிலிப் மட்டும் யாருடனும் பேசாமல் ஆழ்ந்த யோசனையுடன் ஜன சந்தடியைத் தாண்டிக்கொண்டு ஊர்க் கோடிக்கு வந்தான். திடீரென்று எதிர்புறத்திலுள்ள ஒரு சிறு வீட்டின் முன் ஒரு பெரும் சிறுவர்க் கூட்டம் உன்னிப்பாக ரகசியமாகப் பேசிக்கொள்வதைப் பார்த்ததும், பிலிப் ஆச்சரியத்துடன் அவர்களின் அருகே போனான்.

"தர்காஸ் மிகவும் நல்லவள். அவள் இறந்திருக்கமாட்டாள். ஆண்டவர் அவளைக் காப்பாற்றுவார்!"

தர்காஸின் பெயரைக் கேட்டதும் பிலிப் திடுக்கிட்டான். "தையல் வேலை செய்து ஏழைகளின் சேவகியாகத் திகழும் தியாக தர்காஸா இன்று சாவுடன் போராடுகிறாள்?"

தன் இடுப்பில் கட்டியிருந்த கயிற்றை பலமுறை இழுத்து துக்கம் கண்களில் நீராகப் புடைக்க அந்த இடத்திலேயே உலாவினான் பிலிப்.

தர்காஸ் துணி தைக்கும் ஊசியை, 'பறக்கும் ஊசி' என்று எல்லோரும் அடைமொழியிட்டு அழைத்தார்கள்.

அவள் தைக்கும்போது பறவையைப் போலத்தான் அந்த ஊசி துணிமீது பறந்து ஓடும். பிலிப் அணிந்திருக்கும் உடையைக் கூட தர்காஸ்தான் அந்த பறக்கும் ஊசியால் தைத்துக் கொடுத்தாள். அந்த ஒரே ஒரு ஆடைதான் அவனுக்கு ஆஸ்தியாக இருந்தது.

அன்று அவளைச் சுற்றி நின்று அனுதாபப்படும் மக்களெல்லாம் கூட, தர்காஸின் பறக்கும் ஊசியால் தைத்த ஆடையைத்தான் அணிந்திருந்தார்கள். விதவைகள், அனுதைகள், பிச்சைக்காரர்கள், பிணியாளர்கள் எல்லோருக்குமே அவள்தான் உதவி புரிந்து வந்தாள். ஜாப்பா நகரம் முழுவதுமே, அவளுடைய கருணையைப் பாராட்டி மக்கள் பேசிக்கொண்டிருந்தனர். அவளுடைய பறக்கும் ஊசியால் தைத்த உடைகளைக்கொண்டு எத்தனையோ ஏழைகளின் உடலைப் போர்த்தியிருக்கிருள். தனவந்தர்களின்—படித்த மேதைகளின் செல்வாக்கைவிட தர்காஸின் செல்வாக்கு ஜாப்பா நகர் பாமரர்களின் உள்ளத்தை பரிபூரணமாக கவர்ந்திருந்தது.

தர்காஸ் அடிக்கடி அழகாக எல்லோரிடமும் கூறி வந்த வார்த்தைகள் இப்பொழுது பிலிப்புக்கு ஞாபகம் வந்தது.

"என்னுல் போதிக்கவோ, நாடு நகரமெல்லாம் சுவிசேஷத்தைப் பரப்பவோ முடியாது. ஆனுல், சுவிசேஷ போதனைப்படி செயலில் நடந்து காட்ட முயல்கிறேன். எல்லோரும் தன்னைப்போல பிறரையும் நேசித்து, சேவா உணர்ச்சி மிஞ்ச பிறர் நலத்திற்காக பாடுபட்டு மனிதர்களாக வாழவேண்டும்!"

தர்காஸ் இப்படி அடுத்தவருக்கு போதித்து தன் வரைக்கும் கல்லாக, மண்ணுக வாழவில்லை. ஆறறிவு படைத்த மனித ஜீவனுக சாதனையுடன் தான், அவள் வாழ்ந்தாள்.

**"அன்பு மணம் வீசும் ஜாப்பா நகரின் எழில் ரோஜா எங்கள் தர்காஸ்!"** என்றுதான் எல்லோரும் அவளைப் போற்றிய

தோடு அவள் மீது ஓர் தனிப் பற்றும், விசுவாசமும் வைத்திருந்தனர். அந் நகர் பூமியில் சோர்வு இருள் பர்வாது, தன் தியாகச் சுடர் பரப்பி, சுறுசுறுப்பை அவள் எங்கும் படர விட்டாள்.

''அன்பே உருவான அத்தகைய மாது ஏன் இறக்கவேண்டும்? சந்தையில் பூ விற்கும் கிழவி எஸ்தரை விட தர்காஸ் இளையவள் தான். மெசியா மக்களுக்காக உலகில் பிறந்து, வாழ்ந்து தன்னை பலி யாக்கினர். அவரது இரக்கத்தின் ஆட்சியில் உண்மை இருக்கிறது. தர்காஸ் இறந்ததும் ஏதோ ஓர் நன்மையான காரியத்திற்காகத் தான் இருக்கும்''. தனக்குள் புலம்பிய பிலிப் ஏறிட்டு வீட்டின் மேல் தளத் தைப் பார்த்தான்.

யாரோ ஓர் பெண்ணின் துயர முகம் வெளியே தெரிந்தது. துயரக் குரலில், ''தர்காஸ் இறந்து விட்டாள்'' என்று அவள் சொன் னாள். அந்த வார்த்தையைக் கேட்டதும், அங்கு கூடியுள்ளோர் யாவ ரும், வாய்விட்டே அழுது விட்டனர். பிலிப்பும் அழுது விட்டான்.

''கருணைக் கடவுளுக்கு காரணம் தெரியும். அவர் எடுத்துக் கொள்வார். பிறகு அவர் கொடுப்பார்''. பிலிப் தனக்குத்தானே சமாதானம் சொல்லிக் கொண்டான்.

சில தினங்களுக்கு முன் இராயப்பர், மரித்த லீடா நகரவாசி ஒருவனை பிழைக்க வைத்தது, இப்பொழுது பிலிப்பிற்கு ஞாபகம் வந்தது. இராயப்பர் அருகிலுள்ள லீடா நகரில்தான் அப்பொழு தும் இருந்தார்.

பிரயாணி ஒருவன், ''நேற்றுக்கூட இராயப்பரை லீடா வில் பார்த்தேன்'' என்றான். இராயப்பர் வந்தால் எப்படியும் மக்கள் சேவகி தர்காஸை பிழைக்க வைத்துவிடுவார் என்ற நம்பிக்கை, பிலிப்பின் உள்ளத்தில் எழுந்தது. புது விழிப்புடன் பிலிப் கூட்டத்தை விலக்கிக்கொண்டு அந்த வீட்டின் கதவடிக்குப் போனான்.

அப்பொழுது நரைத்த நீண்ட தாடியுள்ள வயோதிகன் ஒருவன் பிலிப்பின் தோளைப் பிடித்துக் குலுக்கி, ''அமைதியாய் இரு தம்பி! இறந்து ஆத்மாவுக்காக நாம் மரியாதை செய்வோம்'' என்றான்.

வியப்புடன் அவனை நிமிர்ந்து பார்த்த பிலிப், "சீக்கிரம் இராயப்பரிடம் போய் இது பற்றி தெரிவித்தால், தர்காஸ் ஒரு வேளை பிழைக்கலாம். வீடாவில்தான் இப்பொழுதும் இராயப்பர் இருக்கிறார்" என்றான்.

புத்துணர்ச்சியால் வயோதிகனின் விழிகள் அகன்று விழித்தன. நீண்ட தாடியை உறுவியபடி, "ஆம். அதுதான் நல்லது. வா. நாம் ஓடி அவரை அழைத்து வருவோம்" என்றான். இருவரும் வேகமாக நடந்து மறைந்தார்கள்.

நேரம் ஆக ஆக ஜனக் கூட்டம் வீதியெல்லாம் வந்து நிறைந்து போனது. இராயப்பர் வந்து எப்படியும் தர்காஸை பிழைக்க வைத்து விடுவார் என்று எல்லோரும் பேசிக்கொண்டார்கள். ஒரு சிலர் பிரேத அடக்கத்துக்கு ஆகவேண்டிய காரியங்களை செய்ய ஆரம்பித்தனர். ஏழைகளெல்லாம் தர்காஸை நினைத்து ஏங்கி கண்ணீர் வடித்து சிலையாக சமைந்து நின்றனர்.

இருளும் ஜாப்பா பூமியில் குடியேற வந்துக்கொண்டிருந்தது. திடீரென்று ஜனக் கும்பலிடையே சலசலப்பு ஏற்பட்டு வாய்பொத்தி வழி விட்டனர்.

நீண்ட கம்பீரமான உருவம். சாந்தம் வீசும் ஒளியேறிய விழிகள்; புன்னகை வதனம். இராயப்பர் வந்தார். அவர் பின்னால் பய, பக்தியுடன் பிலிப்பும், அந்த வயோதிகனும் வந்தனர். ஜனங்களின் முகத்தில் நம்பிக்கை ஒளி பிறந்தது. ஆவலாக அவரையே பார்த்துக் கொண்டு எல்லோரும் நின்றனர்.

இராயப்பர் வீட்டின் மேல் தளத்தை அடைந்ததும் பின்புறம் திரும்பி, "பிரிய தோழர்களே, இங்கேயே அமைதியாக இருங்கள்" என்று கூறிவிட்டு வெளிக் கதவை மூடிக்கொண்டார்.

கதவடியில் பிலிப் நின்று முடிவு தெரிய தவித்துக்கொண்டிருந்தான். மற்றவர்கள் தர்காஸின் சிறிய தொண்டைப் பாராட்டி ஓசையிடாமல் பேசிக் கொண்டிருந்தனர்.

சிறிது நேரத்தில் எங்கும் அமைதி நிலவியது. இருளும் நகரை விழுங்கி விட்டது. பிலிப்பும் பிரார்த்தித்துக் கொண்டுதான் இருந்தான். அறையினின்று அமைதியான குரல் எழுந்தது. "தர்காஸே,

எழுந்திரு!'' இராயப்பரின் குரல் கேட்டு எல்லோரும் கதவடியை பார்த்தபடி அசைவற்று நின்றனர்.

மெதுவாக கதவு திறந்தது. அகல் தீப மஞ்சள் ஒளி வீசியதோடு இராயப்பரின் பின்புற நிழலுருவம் தெரிந்தது.

தர்காஸும் எழுந்து நின்றாள். கார்முகில் வானில் திடீரென்று சந்திரன் சிரிப்பு காட்டியதுபோல், எல்லோர் முகத்திலும் பரவச போதையுடன் ஆனந்த ரேகை வெடித்தது.

இராயப்பர் சாந்தமாகச் சொன்னார்.

"ஆண்டவர் அருளால் தர்காஸ் சாவினின்று தப்பி, பிழைத்தெழுந்து விட்டாள். தீபமேற்றுங்கள்; நீங்கள் காண்பீர்கள்!''

பிலிப் துள்ளிக்குதித்து, "ஏழைகளின் சம்ரட்சணி எங்கள் தர்காஸ் பிழைத்தெழுந்துவிட்டாள். தூங்கி எழுந்தவள்போல் உற்சாகமாக உயிராக இருக்கிறாள்'' என்று ஆடிப்பாடி எல்லோரையும் பார்த்துச் சொன்னான். நகரெல்லாம் இந்த நற்செய்தியைப் பரப்ப சிட்டுக் குருவி போல பறந்து ஓடினான், பிலிப்.

ஜன சந்தடியற்ற மரங்கள் சூழ்ந்த ஊர்க்கோடியில் வந்து அமர்ந்து, ஆகாயத்தை அண்ணாந்து பார்த்தான் பிலிப். நட்சத்திர வெள்ளி ரோஜாக்கள் வான வீதியில் உதிர்ந்து ரம்யமாக சிதறிக் கிடந்தன.

'தர்காஸின் பறக்கும் ஊசி, அவள் செத்துப் பிழைத்தது. மெசியாவின் அருள் பாலிப்பு!' எல்லாமே பிலிப்பின் சிந்தையில் தோன்றி புத்துணர்ச்சியை ஊட்டியது. அத்துடன் இராயப்பர் கூறிய பொன்மொழிகள் புது ஒளியுடன் அவன் இதயத்தில் ஒலித்துக் கொண்டிருந்தன.

**"தீப மேற்றுங்கள்; நீங்கள் காண்பீர்கள்!''**

"தங்களையே தாங்கள் அறியாத உலக மக்களிடையே நாம் ஞான தீபமேற்றினால்? இல்லை. நாமே நம் உள்ளத்தில் ஞான தீபமேற்றினால்?'' பிலிப் சிந்தித்துக்கொண்டே யிருந்தான்.

இருள் சூழ்ந்த ஜாப்பா நகர பூமியும், நட்சத்திர ரோஜா பூக்கள் சூடிய நீலவானமும், ஆழ்ந்த சிந்தனையில் மூழ்கிய பிலிப்பைப் பார்த்து சிரித்துக்கொண்டேயிருந்தன !

---

# இந்நூலாசிரியர்

## பி.ஏ. தாஸ்

## எழுதியவை

### நாவல்கள்

o

முல்லை வாசல்
கேரளக் குயில்
உடைந்த மத்தளம்
கனவு
கொள்ளைக்காரன் காதலி
பாடும் படகு
வசந்த கோகிலம்
கிளியும் பைங்கிளியும்

### சிறு கதைகள்

o

சபதம்
கவியும் ரோஜாவும்
வண்டிக்காரன்
பரிசு (சரித்திரக் கதைகள்)
நடு நிசியில்
மணவாழ்க்கை மகாநாடு அல்ல
(பலமொழிக் கதைகள்)

### கட்டுரைகள்

o

என் நாடே !
பரித்தியாகம்
பேனா மன்னர்கள்
சுதந்திர பூமி

### நாடகங்கள்

o

புஷ்பா
புத்துயிர்
தூரத்துப் பச்சை

### அடுத்த வெளியீடுகள்

o

எரிமலை (அச்சில்)
கன்னி நகர் கடற்கரையிலே (அச்சில்)



## மயிலைப் பதிப்பகம்

செந்தோம் ; சென்னை-4



## பி. ஏ. தாஸ்

இவர் எழுதத் தொடங்கிய பத்து ஆண்டுகளில் ஆயிரத்துக்கு மேற்பட்ட சிறு கதைகளும், நூற்றுக் கணக்கான கட்டுரைகளும், பத்து நாவல்களும், பல நாடகங்களும் ஏராளமான மொழிபெயர்ப்புக் கதைகளும் எழுதிக் குவித்திருக்கிறார்.

**நல்லாயன், விஜய, சுதந்திரம்** முதலிய பத்திரிகைகளில் உதவி ஆசிரியராகப் பணியாற்றி நல்ல பத்திரிகை அனுபவமுடையவர். **கவியும் ரோஜாவும்** (1955) என்ற இவருடைய முதல் சிறு கதைத் தொகுதி வெளி வந்தபோது, பத்திரிகாசிரியர்களாலும் அறிஞர்களாலும் அமோகமாகப் பாராட்டப்பட்டது.

இவர் சரித்திரக் கதைகளைப் படைப்பதில் அதிக ஆர்வமும், திறமையுமுள்ளவர்.

"இவர் ஒரு வால்டர் ஸ்காட்டைப்போல், பங்கிம் சந்திரரைப்போல், ராமேஷ் சந்திர தத்தரைப்போல், ஏன்? நம் கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தியைப் போல் பிரபல சரித்திரக் கதாசிரியராக எதிர் காலத்தில் வந்தால் கூட நாம் ஆச்சரியப் படுவதற்கில்லை. இவர் அவ்விதப் பெரு நிலையை அடைய வேண்டு மென்றே நான் பெரிதும் விரும்புகிறேன். மனமார வாழ்த்துகின்றேன்."

—இப்படி இவரைப் பாராட்டி சிறப்பித்திருக்கிறார் பிரபல நாவலாசிரியர் திரு. நாரணதுரைக்கண்ணன் அவர்கள்.

PREMA ART PRINTERS, MADRAS-24